# கல்கி

KALKI

21.10.2007 ரூ.8.00 80 பக்கங்கள்

குடும்பத்துடன் படிக்க...






## காங்கிரஸ் ஏன் பயப்பட வேண்டும்?



வட்டமேஜை

சேது சமுத்திரத் திட்டம் பூதாகாரமாகி விடாமலிருக்க சமாதானப் பாதையைக் காட்டியிருந்தது தலையங்கம்!

- சாமி, திருவண்ணாமலை

ஒரு தவறை இன்னொரு தவறைக் கொண்டு தண்டிக்க முடியாது. தலையங்கம் சிந்தனைக்கு விருந்து!

- உமாதேவி பலராமன், மதுரை
- 'வானவில்' மூர்த்தி, கூத்தப்பாக்கம்

கடுமையான எதிர்ப்புக்குப் பிறகும் ராமர் விவகாரத்தில் தவறுகளை உணர்ந்து திருத்திக்கொள்ள மறுக்கிறாரே கருணாநிதி!

- எஸ்.ராஜேஸ்வரி, திருநெல்வேலி

நடுநிலை மாறாத நிலைப்பாட்டால் தான் இன்றளவும் மற்ற பத்திரிகையி லிருந்து வித்தியாசப்படுகிறது கல்கி!

- மன்னை சதிரா, மன்னார்குடி

'இரட்டைக் குழல் துப்பாக்கி' அட்டைப் படக் கட்டுரை சூப்பர் டூப்பர்! இந்த ஜோடியின் அசத்தல் தொடரட்டும்!

- ஏ.பி.எஸ். ரவீந்திரன், வள்ளியூர்

ஸ்ரீ லலிதா பகுதி மனதில் ஆழமாகப் பதிகிறது. அன்னையின் அருள்பெற வழி செய்யும் அற்புதத் தொடர்!

ஸ்ரீலலிதா தொடர் தித்திக்கும் தேன் சமுத்திரம்.

- ம.சங்கரி ரமேஷ், விழுப்புரம்
- என். காளிதாஸ், சிதம்பரம்

இனி ஜக்கி வாசுதேவை 'ஜக்கி'(ய) வாசுதேவ் என்று அழைக்கலாம்!

- ச.ஆதிகேசவன், கோவில்பட்டி

ஜக்கி வாசுதேவின் பதில்கள்

# சூப்பர்




✉ 14.10.07 இதழ் ஸ்ரீ லலிதா பகுதியின் ஓவியத்தில் அன்னையின் பெயர் 'ஸ்ரீ மங்களாம்பிகை' என்று வருவதற் குப் பதிலாக 'ஸ்ரீ காமாக்ஷி' என்று தவறா கப் பிரசுரமாகிவிட்டது. தவறுக்கு வருந்துகிறோம்.

- ஆர்.

✉ அரசியல்வாதிகளைச் சுட்டிக்காட்டி தங்கள் தவறை நியாயப்படுத்தும் மருத்து வர்களின் செயல் ஏற்புடைய தல்ல!

- ஆர்.பிரகாஷ், பொன்மலை

அனைத்தும் சப்பைக்கட்டு.

- பா.சு.மணிவண்ணன், திருப்பூர்

கடவுள் இல்லாமல் வாழ்ந்துவிடலாம்; காற்று இல்லாமல் வாழ முடியாது. ஜக்கியின் வார்த்தை நிதர்சன உண்மை!

- இந்திரன், நாகர்கோவில்

'சத்தம் போடாதே' படத்தின் அனுபவங்களைப் பகிர்ந்துகொண்ட வஸந்த், மனதை நெகிழ வைத்துவிட்டார்.

- எம்.இராஜேந்திரன், லால்குடி

உள்ளும் புறமும் பகுதி மீடியாவின் விஷத்தன்மையை உணர்த்தியது. உமா குரானா தைரியமானவர் என்பது புலனாகிறது.

- கெள.அரவிந்த், கோவில்பட்டி

'கல்வியும் வேலையும் மன அழுத்தத்தைத் தருவது கவலைக்குரிய விஷயம்' என்பதைச் சொன்னது 'தகுதியிருந்தும் தற்கொலை' கட்டுரை.

- எம்.ஜான்சன்,
கோவில்பட்டி

# நேயர்!

✉ வாரம் ஒரு நாளோ அல்லது மாதம் இரு நாட்களோ உபவாசம் இருந்தால் உடம்புக்கும் நல்லது; நாட்டுக்கும் நல்லது.

- நா.பாலசுப்பிரமணியன், சென்னை
- கோமதி, திருச்சி

✉ தூறல் கவிதை, மின்னல் கதை, இடி சிரிப்ஸ் என்று அறிவித்து வாசகர்களை பரிசு மழையில் நனைய வைக்கக் காத்திருக்கும் உங்களைத் தென்றல் காற்று வருடிச் செல்லட்டும்.

- சுந்தர் சுந்தரி, கோவை





# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

ஆசிரியர் குழு :
சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

சேது சமுத்திர விவகாரத்தில், சென்னையில் கருணாநிதி உண்ணாவிரதம் இருந்தபோது, உச்சநீதிமன்ற நீதிபதி அகர்வால் தெரிவித்த கருத்துக்கள், அவரது கவனத்துக்குக் கொண்டுவரப் பட்டன. உடனே கிளம்பிக் கோட்டைக்குப் போனார் கலைஞர். நியூயார்க்கில் இருந்த சோனியா மற்றும் பிரதமருடன் தொடர்புகொள்ளப் பட்டு, காங்கிரஸ் தரப்பிலிருந்து உச்சநீதி மன்ற நீதிபதியின் பேச்சுக்குக் கண்டனம் தெரிவிக்க வேண்டும் என்று வலியுறுத்தப் பட்டதாம். 'அப்படி ஏதும் வரவில்லை என்றால், எங்கள் அமைச்சர்களை மத்திய அரசிலிருந்து விலக்கிக்கொள்ளும் முடிவைக்கூட எடுக்க வேண்டியிருக்கும்' என்று மிரட்டல் விடப்பட்டது என்கிறார்கள். ஏற்கெனவே இடதுசாரிகள் கொடுக்கும் குடைச்சலில் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கும் காங்கிரஸ், கலைஞரைச் சமாதானப்படுத்தும் நோக்கில், ''கலைஞர் நாட்டிலேயே உயர்ந்த தலைவர்களில் ஒருவர்; அவருக்கு நேரிடையாகவோ, மறைமுகமாகவோ எந்தத் தொந்தரவும் கொடுக்க மாட்டோம்'' என்று பத்திரிகையாளர்களிடம் சொன்னார் மத்திய அமைச்சர் ப்ரியரஞ்சன்தாஸ் முன்ஷி. அது மட்டுமா? ''உண்ணாவிரதம், உச்ச நீதிமன்றத் தீர்ப்புக்கு எதிரானது அல்ல; காந்தியே கடைப்பிடித்த அஹிம்சைப் போராட்டம்'' என்று வக்காலத்து வேறு வாங்கினார்.


* ஜி.கே.மணி

ராமர் பற்றி கலைஞர் தெரிவித்த கருத்துக்களால் பெரிதும் பாதிக்கப்பட்டிருப்பது காங்கிரஸ்தான். பா.ஜ.க. ராமர் விவகாரத்தைக் கையிலெடுத்து பிரசாரம் செய்யும் நிலையில், வட மாநிலங்களில் நடக்கவிருக்கும் சட்டப்பேரவைத் தேர்தல்களில் காங்கிரஸுக்குப் பலமாக அடி விழும் வாய்ப்பிருக்

படம் : ஸ்ரீஹரி

# காங்கிரஸ் ஏன்

கிறது. இந்த நிலையில் காங்கிரஸ், கலைஞரைப் பார்த்துப் பயப்பட வேண்டிய அவசியம் என்ன?



* மல்லை சத்யா

"தி.மு.க.வைப் பார்த்து காங்கிரஸ் பயப்படவில்லை என்பதே என் கருத்து" என்கிறார் தமிழக பா.ஜ.க. தலைவர் இல.கணேசன். "மத்திய அரசில் பங்கு வகிக்கும் தி.மு.க.வைக் கேட்காமலேயே உச்சநீதிமன்றத்தில் சேது சமுத்திரத் திட்டம் குறித்துத் தாக்கல் செய்திருந்த மனுவை மத்திய அரசு வாபஸ் பெற்றுக்கொண்டது. இது தவிர, கலைஞரின் இலட்சிய ரீதியான கருத்துக்கு நேர் எதிரிடையான நிலையாக, கொண்டுவிட்டது" என்கிறார்.

மத்தியிலும் ஆட்சியில் பங்கு; மாநிலத்திலும் ஆட்சி; பொறுப்பை நிறைவேற்ற வேண்டிய அமைச்சரும் தி.மு.க.வைச் சேர்ந்தவர். இந்நிலையில் யாரை எதிர்த்து உண்ணாவிரதம் இருந்தார் கலைஞர்?- இது நடுநிலையாளர்களின் கேள்வி. "நிச்சயமாக கருணாநிதி உண்ணாவிரதம் இருந்தது உச்சநீதிமன்றத்தை எதிர்த்துத்தான். இங்கு சட்டத்தின் ஆட்சியே நடக்கவில்லை. இதை உள்ளாட்சித் தேர்தல் வன்முறைக்குப் பிறகு உயர்நீதிமன்றம் சொன்னது; இப்போது உச்சநீதிமன்றம் சொல்லியிருக்கிறது; அவ்வளவுதான்" என்கிறார் ம.தி.

**" காந்தியின் உண்ணாவிரதத்தோடு கலைஞரை ஒப்பிட்டதன் மூலம், தன்னைத்தானே காங்கிரஸ் கேவலப்படுத்திக் கொண்டுவிட்டது! "**

'அனைத்து மத உணர்வுகளையும் மதித்து நடக்க வேண்டும்' என்று சோனியா சொல்லியிருக்கிறார். அணுசக்தி ஒப்பந்த விஷயத்தில் அமெரிக்க ஆதரவு நிலை எடுத்துவிட்டு, கம்யூனிஸ்டுகளிடம் சிக்கி இருதலைக்கொள்ளி எறும்பாக அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறது காங்கிரஸ். அது தன்னுடைய நிலையைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் காங்கிரஸுக்குக் கெடுதல்; நாட்டுக்கு நன்மை" என்கிற கணேசன்,

* தா.பாண்டியன்



"காந்தியின் உண்ணாவிரதத்தோடு கலைஞரை ஒப்பிட்டதன் மூலம், தன்னைத்தானே காங்கிரஸ் கேவலப்படுத்திக் கொண்டுவிட்டது" ...

மு.க.வின் துணைப் பொதுச் செயலாளர் மல்லை சத்யா.

'பல தனிப்பட்ட காரணங்களால் சோனியாவுக்கு ஜெயலலிதாவுடன் கூட்டணி வைத்துக்கொள்ள முடியாத சூழல். எனவேதான் கலைஞரை உறுதியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறது காங்கிரஸ்' என்ற பேச்சும் உண்டு. "பகைவனுக்குப் பகைவன் நண்பன் என்ற கண்ணோட்டத்தில் கலைஞரோடு ஒட்டி உறவாடுகிறது காங்கிரஸ். அரசியல் சூழல்கள் திடீரென்று மாறக் கூடும். பா.ஜ.க.வைக் கடுமையாக விமர்சனம் செய்யும் கருணாநிதி,

# பயப்பட வேண்டும்?

ஒரு காலத்தில் அதனுடன் ஒட்டி உற வாடியவர்தானே. ராமரைப் பற்றிய கலைஞரின் கருத்துக்களில் சற்றும் உடன்பாடில்லை என்பதைத்தான், 'காங்கிரஸ் சந்தேஷ்' என்ற பத்திரிகையில் கரண்சிங் எழுதிய கட்டுரை சொல்கிறது. என்னதான் முயற்சி செய்தாலும் தானே கவிழப் போகிறது மத்திய அரசு. காங்கிரஸுக்குத் தீங்கு பயக்கும் கூட்டாளிதான் கலைஞர் என்கிறார் அ.தி.மு.க.வின் அதிகாரபூர்வ நாளேடான நமது எம்.ஜி.ஆரின் கட்டுரையாளர் கோ.கலிவரதன்.

**தி.**மு.க.- அ.தி.மு.க. தவிர வேறு ஒரு வலிமையான கட்சி துணைக்குக் கிடைக்கும் வரை, தி.மு.க.வுடனான காங்கிரஸ் தோழமை தொடரும் என்பது அரசியல் பார்வையாளர்களின் கருத்து. ''கலைஞர்



✱ இல.கணேசன்

''அது உண்மைதான். கலைஞர் மூத்த தலைவர். இன்றைய மத்திய அரசு அமைவதற்கு முக்கிய காரணமாக இருந்தவர். எந்த ஆட்சிக்கு ஆதரவு கொடுக்கிறோமோ, அதற்கு இறுதிவரை உறுதுணையாக இருப்பவர். தங்களுக்கு 'இன்னின்ன துறைகள் வேண்டும்; இவரிவருக்கு அமைச்சர் பொறுப்புகள் வேண்டும்' என்று நிறைவேற்றக்கூடிய கோரிக்கைகளை வைத்திருப்பார். எனவே, காங்கிரஸ் எதிர்காலத்தில் அதிரடி முடிவுகள் எடுக்க வாய்ப்புள்ளதே தவிர, இப்போது எதுவும் செய்யாது. ஆனால், தி.மு.க. தலைமையிலான கூட்டணி, இனி நடக்கும் பாராளுமன்றத் தேர்தலில் நாற்பதுக்கு நாற்பது இடங்களைக் கைப்பற்றுவது மிகவும் கடினம்'' என்கிறார் சரத்குமாரின் சமத்துவ மக்கள் கட்சியின் கொள்கை பரப்புச் செயலாளர் மருது அழகுராஜ்.



✱ பண்ருட்டி

> **"தி.மு.க.விடம் காங்கிரஸுக்குப் பயமில்லை என்றால், ஸ்ரீ ராமரைப் பற்றி அதன் தலைவர் பேசிய அவதூறுகளை மறுத்திருக்கலாமே!"**

ரைப் பார்த்து காங்கிரஸ் பயப்படுகிறது என்பதைவிட, ஜெயலலிதா எந்தவிதத்திலும் மீண்டும் வந்துவிடக் கூடாது என்பதில்தான் காங்கிரஸ் தெளிவாக இருக்கிறது. எனவேதான் தி.மு.க.வை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது'' என்கிறார் தே.மு.தி.க. அவைத் தலைவர் பண்ருட்டி ராமச்சந்திரன்.

'**கா**ங்கிரஸுடன் கலைஞர் வைத்துள்ள உறவு அரசியல் தாண்டி, நல்ல பாசத்துடன் இருக்கிறது. சோனியா, கலைஞர் மீது மிகவும் மரியாதை வைத்திருக்கிறார். இதனால்தான் தங்களுக்குச் சங்கடமென்றாலும் காங்கிரஸ் தி.மு.க.வை விட்டுத்தராமல் பேசுகிறது' என்பதும் பொதுவான கருத்து.

✱ கலிவரதன்



**உ**ண்ணாவிரத விவகாரத்தில் கலைஞரின் முடிவை நூற்றுக்கு நூறு ஆதரிக்கின்றன தி.மு.க. கூட்டணிக் கட்சிகள். ''மதச்சார்பு சக்திகளை அதிகாரத்துக்கு வெளியே நிறுத்துவதில் எங்கள் கூட்டணியின் பங்கு மகத்தானது. எனவே, இதில் யாரும் யாரையும் பயமுறுத்த வேண்டியதில்லை; பயப்படவும் வேண்டியதில்லை'' என்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தா. பாண்டியன்.

பல விவகாரங்களில் தி.மு.க. அரசுடன் மோதிவரும் நிலை

யில், பா.ம.க.வும் சேது சமுத்திர விவகாரத்தில் கலைஞரை உறுதியாக ஆதரிக்கிறது. "நடைபெற்ற உண்ணாவிரதம், சேது சமுத்திரத் திட்டத்துக்கு மக்களின் முழு ஆதரவை வெளிப்படுத்தும் வகையில்தான் ஏற்பாடு செய்யப்பட்டது. தவிர, யாரையும் எதிர்த்தல்ல. இந்திய அரசியலில் மூத்த தலைவர் கலைஞர். கருத்து வேறுபாடுகளையும், பிரச்னைகளையும் அவருடன் பேசித் தீர்த்துக்கொள்ள முடியும். இதில் பயமுறுத்தலுக்கு இடமில்லை" என்கிறார் பா.ம.க. தலைவர் ஜி.கே.மணி.

"**யா**ரையும் புண்படுத்தும் எண்ணம் எனக்கில்லை என்று சொல்லியிருக்கிறார் கலைஞர். எங்கள் இலட்சியம் சேது சமுத்திரத் திட்டம் நிறைவேற வேண்டும். மத்திய அரசு மூன்றரை ஆண்டுகளாக வெற்றி நடை போடுகிறதென்றால் அதற்குக் காரணம், கலைஞரின் உறுதியான ஆதரவே. இதை காங்கிரஸ் புரிந்துகொண்டிருக்கிறது" என்பதுதான் விடுதலைச் சிறுத்தைகள் கட்சியின் பொதுச் செயலாளர் தொல். திருமாவளவனின் மனநிலை.



✱ கிருஷ்ணசாமி

**த**மிழ்நாட்டில் உள்ள தி.மு.க. கூட்டணிக் கட்சிகள் கலைஞருடன் உறுதியாக இருந்தாலும், காங்கிரஸ் ஏதாவது அதிரடியாகச் செய்துவிடுமோ என்ற கலக்கம் தி.மு.க.வுக்கு இருக்கிறது. முன்பு ஜெயின் கமிஷன் அறிக்கை தொடர்பாக தி.மு.க. அமைச்சர்கள் பதவி விலக வேண்டும் என்று காங்கிரஸ் பிடிவாதம் பிடித்ததால், குஜ்ரால் அரசு கவிழ்ந்தது என்பது வரலாறு.

"எங்கள் கருத்துக்களை நாங்கள் யார் மீதும் திணிக்க மாட்டோம். எதிர்க்கட்சியில் இருந்தாலும் சரி; ஆட்சி அதிகாரத்தில் இருந்தாலும் சரி... தமிழ்நாட்டின் நலனுக்காக எங்கள் குரல் தொடர்ந்து ஒலித்து வருகிறது. நாங்கள் போராடுவோம். மத்திய அரசு தனது கடமையைச் செய்து வருகிறது" என்கிறார் தி.மு.க.வின் அமைப்புச் செயலாளரான டி.கே.எஸ். இளங்கோவன்.



✱ டி.கே.எஸ். இளங்கோவன்

**ச**ரி, இதற்கெல்லாம் காங்கிரஸின் பதில் என்ன? "தமிழர்களின் நூற்று நாற்பத்தேழு வருடக் கனவு சேது சமுத்திரம். எனவேதான் ஒட்டுமொத்த தமிழக மக்களும் திட்டத்துக்கு ஆதரவாக இருக்கிறோம் என்பதைக் காட்ட உண்ணாவிரதம் ஏற்பாடு செய்யப்பட்டது. இது மத்திய அரசுக்கோ, நீதிமன்றத்துக்கோ எதிரானது அல்ல. மற்றபடி ராமர் விவகாரத்தைப் பொறுத்தமட்டில் 'ஹே ராம்' என்று சொல்லி உயிரை விட்டார் மகாத்மா. அவரது வழி வந்தவர்கள் நாங்கள். யாருடைய மத உணர்வையும் புண்படுத்த மாட்டோம். மத்திய அரசுக்கு தி.மு.க. ஆதரவு கொடுத்து வருவதுபோல், இங்கிருக்கும் மாநில அரசுக்கு உறுதியாக ஆதரவைத் தெரிவித்து வருகிறோம். தோழமைக்கு இடையில் அச்சத்துக்கும் பயத்துக்கும் பயமுறுத்தலுக்கும் துளியும் அவசியம் இல்லை" என்கிறார் தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி.

தி.மு.க.விடம் காங்கிரஸுக்குப் பயமில்லை என்றால், ஸ்ரீ ராமரைப் பற்றி அதன் தலைவர் பேசிய அவதூறுகளை மறுத்திருக்கலாமே; தி.மு.க. தலைவரை எச்சரித்து, அவரது பேச்சின் விளைவாக நடந்த விரும்பத்தகாத நிகழ்வுகளைத் தவிர்த்திருக்கலாமே! மத்திய அரசுக்கு ஆதரவு தேவை என்கிற நிர்ப்பந்தத்தில் எவ்வளவுதான் விட்டுக் கொடுத்து அடிபடப் போகிறது காங்கிரஸ்...? - இதுதான் மக்கள் மனத்தில் இன்று உறுத்தும் கேள்வி!

– ப்ரியன்

படங்கள் : ராஜன்

அட்டைப் படம் : ஸ்ரீஹரி

✱ மருது



# எம்டன் மகனுக்கு வரிவிலக்கு இல்லையே..?



* நோபல் - காந்தி!

● கே.துர்கா, சென்னை - 11

? கிரிக்கெட்டுக்கு அளிக்கப்படும் வரவேற்பு, செஸ் வெற்றிக்குக் கிடைக்குமா என்று ஆனந்த் வாய்விட்டுக் கேட்டுவிட்டாரே?

! பார்க்கும்போதே த்ரில் ஏற்படுத்தும் கிரிக்கெட் போல செஸ் ஒரு வெகு ஜன ஆதரவு ஆட்டமாக மாறவே முடியாது - அது முற்றிலும் அறிவுசார்ந்த ஆட்டமாதலால். மக்கள் எதனால் ஈர்க்கப்படுகிறார்களோ அங்குதான் ஸ்பான்ஸர்கள் போவார்கள்; பணம் புரளும்; பரிசுகள் குவியும். ஆனால், அரசாங்கம் எல்லா விளையாட்டுகளையும் சமமாகப் பாவிப்பது ரொம்ப அவசியம்.

● எஸ்.மைக்கேல் ஜீவநேசன், சென்னை - 87 ★

? சொகுசுப் பேருந்து தேவைதானா? பயணிகளிடையே வர்க்க வேற்றுமையை உணர்த்தும்படியாக உள்ளதே?

! ஏற்கெனவே இந்தப் பாகுபாடு ரயில்வேயில் இருக்கிறது. இதனால் புதிதாக வர்க்கபேதம் வந்துவிடப் போவதில்லை. வசதி படைத்தவர்கள் அதிகக் கட்டணம் செலுத்தும்போது, போக்குவரத்துக் கழகங்களின் வருவாய் அதிகரிக்கும். ஆனால், சொகுசுப் பேருந்துகள் நெடுந்தூரப் பயணத்துக்கு மட்டுமே விடப்பட வேண்டும். நகருக்குள் பயணிகள் அதிகம் பயன்படுத்துவதில்லை.

● கே.என்.பாலகிருஷ்ணன், சென்னை - 91

? 'காந்திஜிக்கு நோபல் பரிசு தராதது பெரும் தவறே' என்று நோபல் அறக்கட்டளை இப்போது அறிவித்துள்ளதே?

! அதற்குப் பரிகாரமாக, அமைதிக்கான நோபல் பரிசை 'நோபல்-காந்தி பரிசு' எனப் பெயர் மாற்றி வழங்கலாமே!

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

? பள்ளி, கல்லூரி மாணவர்கள், அரசு ஊழியர்கள் மாதத்தில் ஒரு நாளாவது கதர் ஆடை அணிய வேண்டுமென்று மாநில நிதிக் குழுவின் துணைத் தலைவர் நாகநாதன் கூறியுள்ளாரே?

! நல்ல ஆலோசனைதான். சுதந்திரம் வாங்குவதற்குப் பட்ட கஷ்டங்களையும் தியாகிகளின் உயர்வையும் எண்ணிப்

பார்க்க உதவும் - ஆனால் அவற்றை இன்றைய குழந்தைகள் அறியும் வண்ணம் நமது கல்வித் திட்டம் வடிவமைக்கப்படவில்லையே! பலர் காந்திஜி யார் என்றே தெரியாமல் பள்ளி, கல்லூரி இரண்டையும் கடந்து வந்துள்ளார்கள்!

● வீ.முத்தையா, திருநெல்வேலி

? 'சிவாஜி' என்பது பெயர்ச் சொல் என்று காரணம் காட்டி, வரிவிலக்கு அளிக்கப்பட்டதே, அப்படியானால் 'எம்டன் மகன்' என்ற பெயரில் உள்ள 'எம்டன்' என்பது பெயர்ச் சொல் தானே... அதற்கு ஏன் வரி விதிக்கப்பட்டது?

! அதில் ரஜினி நடிக்காததால்!

● தங்கம் கணேசன், திருவூர் ❒

? பட்டப்படிப்பு - வேலை என்று வயது முப்பதுக்கு மேல் ஆகிவிட, திருமணம் தள்ளிப் போகிறதே - மாற்று உண்டா?

! திருமணம் தாமதமாவதால் பெண்களுக்கு மகப்பேறு சிக்கலாக வாய்ப்பு அதிகம். அதற்காகவாவது 25-26 வயதுக்குள் திருமணம் செய்துகொள்வது நல்லது. இதற்கேற்ப வாழ்க்கையைத் திட்டமிட வேண்டியதுதான்.

● கே.ஆர்.ஜெயலக்ஷ்மி, சென்னை - 11

? மனிதக் கழிவுகளை மனிதனே அகற்றும் சமூகக் கொடுமைக்கு முடிவுகட்ட வேண்டும் என்று மத்திய - மாநில அரசுக்கு உச்சநீதிமன்றம் உத்தரவிட்டது பற்றி...?

! நீண்ட காலமாக பலரால் எழுப்பப்பட்டு வரும் குரல். இன்று நீதிமன்றம் மூலம் ஒலித்திருக்கிறது. எத்தனையோ நவீனங்களை ஏற்றுவிட்ட இந்நாடு, கழிப்பறை புரட்சிக்காகக் காத்திருக்கிறது.

● ப.இராம் முருகன், சிவகங்கை

? முந்தைய ஆட்சியைவிட இந்த ஆட்சியில் வன்முறையின் தாக்கம் அதிகமாக உள்ளதே?

! தாக்கம் மட்டுமல்ல; ஆட்சியில் உள்ளோரின் நாவிலிருந்து வெளிப்படும் பேச்சியல் வன்முறையின் 'நோக்கமும்' அதிகத் தெளிவாகிறது.

## தராசு



* அரசின் அலட்சியம்



* விதிவிலக்கு வரிவிலக்கு



* நொண்டிச் சமாதானம்!

## நீங்கள் கேட்டவை

● என்.பாலகிருஷ்ணன், மதுரை - 4

? ''தி.மு.க. என்னை நாடாளுமன்றத்துக்கு அனுப்பியது. ஆனால், அங்கே என்னால் எதையும் விரிவாகப் பேச முடியவில்லை'' என்று சரத்குமார் வருத்தப்பட்டிருக்கிறாரே?

! அவர் சொல்லும் பதிலில் பெருமளவு உண்மை இருக்கிறது. ஒரு கட்சியின் சார்பில் எம்.எல்.ஏ. அல்லது எம்.பி. பதவியை அடைபவர்கள், கட்சியின் கருத்தைத்தான் சட்டமன்றத்தில், நாடாளுமன்றத்தில் வெளியிட முடியுமே தவிர, தமது சொந்தக் கருத்து மாறுபட்டதாக இருப்பின் அதைச் சொல்ல முடியாது. மறக்கலாம் அல்லது மனத்துக்குள் குமுறலாம்; அவ்வளவுதான். நாளைக்கு இது சரத்குமார் கட்சிக்கும் பொருந்தும்.



* வினைப் பயன்!

* பேசாத பேச்சு!



● எல்.இரவி, செ.புதூர்

? கடன் கேட்ட ஐந்தே நிமிடங்களில் டாடா நிறுவனத்துக்கு நான்காயிரம் கோடி ரூபாயை பாரத ஸ்டேட் வங்கி வழங்கியிருப்பது பற்றி...?

! இன்று வங்கிகளிடம் ஏராளமாகப் பணம் குவிந்திருக்கிறது. கடன் தந்தால் தானே அவர்கள் லாபம் ஈட்ட முடியும்? நம்பகமான இடம் கிடைத்ததும் மின்னல் வேகத்தில் செயல்படாது போனால் வேறு ஒரு வங்கி டாடா கணக்கை அள்ளிக் கொண்டு போய்விடாதா!

● எஸ்.ஆன்டனி தமிழரசன், மும்பை - 17

? ''மாஸ்கோவில் மழை பெய்தால் இங்கே குடை பிடிப்பவர்கள் கம்யூனிஸ்டுகள். இவர்கள் தொடர்ந்து மத்திய அரசை மிரட்டிக் கொண்டிருந்தால், தேர்தலைச் சந்திக்கவும் தயங்க மாட்டோம்'' என்று இளங்கோவன் எச்சரிக்கை விடுத்துள்ளாரே?

! இளங்கோவனின் பேச்சைக் கண்டுகொள்ளாத கம்யூனிஸ்டுகள், ஏறத்தாழ இதே கருத்தை இலைமறைக் காயாக சோனியா வெளியிட்டபோது கொதித்து எழுந்தார்கள். அவர்களைச் சமாதானம் செய்ய வேண்டியதாகிவிட்டது! கப்பறை ஏந்துபவர் பால் சோறு கேட்கலாமோ?

● என்.சண்முகம், சேலம்

? 20 - 20 கிரிக்கெட்டில் இந்தியா ஜெயித்துள்ளது. ஆனால், கர்நாடகத்தில் 20க்கு 20ல் பா.ஜ.க. ஜெயிக்க முடியாமல் போய்விட்டதே?

! அந்த இருபது - இருபது நேர்மையாக நடந்த சாதனை முயற்சி. இந்த 20-20ல் மாபெரும் அரசியல் மோசடி செய்தது தேவகௌடாவின் ஜனதா தளம். அதன் பலனை அனுபவிக்கிறார் குமாரசாமி.

● சி.மகேஷ், திருச்சி - 17

? உச்சநீதிமன்ற ஆணை மீறப்படவில்லை என்கிறார் கலைஞர்; ஆனால் பந்த் காரணமாக மாநிலம் முழுவதும் மக்கள் சிரமத்துக்கு உள்ளானது பற்றி...?

! முதலில் 'மீறப்படவில்லை' என்றவர், பின்பு 'ஆணையை அமல்படுத்துவதில் சில குறைபாடுகள் இருந்திருக்கலாம்; அதற்குக் காரணம் உச்சநீதிமன்றத் தீர்ப்பு இரவு 10.30க்குக் கிடைத்ததே' என்றார். தகவல் தொடர்பு எவ்வளவோ முன்னேறியுள்ள இந்நாளில் இந்த நொண்டிச் சமாதானம் எடுபடவே இல்லை. ●

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
தங்கம் கணேசன், திருவூர்

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
எஸ்.மைக்கேல் ஜீவநேசன், சென்னை - 87

**பரபரப்பான விற்பனையில்...**




போலீஸ்
பொதுமக்கள்
நட்புறவை
மேம்படுத்தும்
ஒரே
மாதஇதழ்

8-ம் ஆண்டில்

# காவலர் செய்தி

ரூ.3/-

அனைத்து மாவட்டங்களுக்கும் நிருபர்கள் தேவை

தற்போது விற்பனையில்..




உங்கள் வீட்டில் கெட்டிமேளம் முழங்க
நீங்கள் விரும்பும் வரன்களின் விபரம்
விரல் நுனியில்... முகவரிகளுடன்....

# திருமண மேடை

ரூ.10/- மாதஇதழ்

## ஜெயம் பப்ளிகேஷன்ஸ்

24, முத்துரங்கன் சாலை, (முதல் தளம்) தி.நகர், சென்னை-17. (அருள்மிகு விநாயகர் கோயில் அருகில்)

போன் : 044-3913 0978 செல் : 9942211998

தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளுக்கும் விற்பனை முகவர்கள் தேவை

# JAI TOURS

எண்.5, முதல் மெயின் ரோடு, அரும்பாக்கம், சென்னை - 106

**Ph: 044 - 24756202, 93805 37352**

அன்புடன் வரவேற்கிறோம்!

நீங்கள் சுற்றுலா பிரியரா? செல்லுமிடத்தில் சரியான வாகனம் கிடைக்குமா? நல்ல உணவு கிடைக்குமா? தங்குமிடம் சரியாய் அமையுமா? என்கிற 'கவலைகளை' மறந்து சுற்றுலாவை முழுமையாக அனுபவிக்க வேண்டுமென எண்ணுபவர்களா?

கவலையை எங்களிடம் கொடுங்கள் சுற்றுலாவை சுகமாக அனுபவியுங்கள்! இந்தியாவின் எந்த மூலைக்குச் செல்வதாக இருந்தாலும் வாகனம், தங்குமிடம், உணவு ஆகியவற்றுக்கு நாங்கள் பொறுப்பு.

தேனிலவு தம்பதினருக்கு தனிச் சுற்றுலாவும் உண்டு.

மாணவர்களுக்கு தனிச் சுற்றுலா மற்றும் பேருந்து ஏற்பாடுகள் செய்து தரப்படும்!

**Our Special Tour for the Year 1 Day (A/c Car)**

| | | |
|---|---|---|
| Oct - 16 | Rs. 400/- வேலூர் | (சாப்பாடு தனி) நாராயிணி (தங்கக் கோயில்), திருவலம், ஜலகண்டேஸ்வர, தெங்கால், ரத்தனகிரி |
| Oct - 28 | Rs. 500/- | முரட்டாண்டி (16 அடி சனிபகவான்), பரிக்கல், திருநாவலூர், புவரசகுப்பம், அபிஷேகபாக்கம், (சாப்பாடு தனி) |
| Nov - 11 | Rs. 350/- | கந்தசஷ்டி ஸ்பெஷல், நெடியமலை, திருத்தனி, பாகசாலை. |

**5 Days Packages Rs. 3,500/-**

Dec - 9 Hyderabad, Silkur, Nagarjuna Dam, Adilabad, Badrachalam, Parnashala, Kondala, Bazaar (Inclusive Train Fare, Bus & Accomandataion)

Dec - 22 Rs. 2500/- Vynad (Kerala), (Train Fare, Bus & Accomandataion)

# உணவுப் பாதைப் பிரச்னைக்கு மனமும் காரணம்!

சிலரை இருபத்து நான்கு மணி நேரமும் டீ.வி.க்கு முன்னாலேயே பழியாய்க் கிடக்கிறான் என்பது உண்டு. அது சின்னத் திரை மோகம். வேறு சிலரை இருபத்து நான்கு மணி நேரமும் பூஜை அறையிலேயே இருக்காங்க என்பதுண்டு. ஆனால், என்டோஸ்கோபி மற்றும் லேசர் அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் எஸ்.ராஜேந்திரனிடம் அழைத்து வரப்பட்ட பெண்மணி, இருபத்து நான்கு மணி நேரமும் இருப்பதாகக் கூறப்பட்ட இடம் வேறொன்று.

அவள் இளம்பெண். திருமணமாகிச் சில வருடங்கள்தான் இருக்கும். நல்ல அழகு. ஆனால், அவள் உடல் மிகவும் மெலிந்து ஒடுங்கி இருந்தது. அவரது கணவனும் மாமியாரும் "நாள் முழுவதும் இவ டாய்லெட்டிலேயே இருக்கா டாக்டர். இவ வயித்துல என்ன பிரச்னைன்னு கொஞ்சம் பாருங்க" என்றனர்.

அந்தப் பெண்ணிடம் அவரது உணவுப் பழக்கம் மற்றும் டாய்லெட் பழக்கம் குறித்துப் பேசினேன். பின்னர் பெண்ணுடன் வந்தவர்களையெல்லாம் வெளியே அனுப்பிவிட்டுச் சில கேள்விகளைக் கேட்டேன். ஆரம்பத்தில் மௌனமாக இருந்தவர், பிறகு உண்மையைச் சொன்னார்.

அவள் கணவனுக்கு மிகவும் சந்தேக புத்தி. தான் அலுவலகம் கிளம்பிய பிறகு தன் அழகான மனைவியை வேறு ஒருவன் இரகசியமாகச் சந்திக்கிறானோ என்கிற ஆதாரம் இல்லாத சந்தேகம். ஒரு நாள் அலுவலகத்துக்குக் கிளம்புவது போல் கிளம்பிவிட்டுச் சத்தம் போடாமல் பின்புற வாசல் வழியாக வீட்டுக்குள் நுழைந்து, சமையல் அறைக்குச் சென்று காத்திருந்தான். அவன் சந்தேகப்பட்டது போல் எதுவும் நடக்கவில்லை. ஆனால், அடுக்களையில் ஒரு பூனை பாத்திரம் ஒன்றை உருட்டிவிட, அந்தப் பெண் அங்கு வேகமாக வந்தாள். எதிர்பாராமல் அங்கு கணவனைப் பார்த்த அதிர்ச்சியில் அலறி இருக்கிறாள். சத்தம் கேட்டுப் பக்கத்து வீட்டுக்காரர்கள் வந்துவிட்டனர். புருஷனின் புத்தியை பகிரங்கப் படுத்த முடியாமல், பூனையால் பயந்துவிட்டதாகச் சமாளித்தாள்.


* டாக்டர் ராஜேந்திரன்

அப்போதிருந்து ஒவ்வொரு நொடியும் தான் கண்காணிக்கப்படுகிறோம் என்ற உணர்வு அவளுக்குத் தோன்றியது. இதனால் அவள் மனநிலை பாதிக்கப்பட்டது. இதைத் தொடர்ந்து வயிற்றுப் பகுதியிலும் பாதிப்பு. IBS (Irritable Bowel Syndorme) எனும் குடல் பாதிப்பு இது. இதனால் எப்போதும் டாய்லெட்டுக்குச் செல்ல வேண்டும் என்கிற நினைப்பு.

விவரம் தெரிந்ததும் மனநல ஆலோசனை தேவை என்பது புரிந்தது. அவளுக்கு மட்டுமல்ல; அவள் கணவனுக்கும்.

தொடர்ந்த ஆலோசனைக்குப் பிறகு அந்தப் பெண் ஓரளவு தெளிவு பெற்றாள். டாய்லெட்டை அடிக்கடி நாடுவதில்லை."

உணவுப் பழக்க வழக்கங்களில் மனதுக்கு எவ்வளவு தொடர்பு உண்டு என்பதை விளக்க இன்னோர் உதாரணத்தையும் கூறினார் டாக்டர் ராஜேந்திரன்.

"வயிற்றெரிச்சல்படுபவர்கள் உண்டு. பிறர் நன்றாக வாழ்ந்தால் இவர்களுக்குப் பொறுக்காது. ஆனால், நெஞ்செரிச்சல் உண்டானவர்களுக்குத் தாங்கள் நன்றாக இருக்க வேண்டுமே என்ற எண்ணம்தான் இருக்கும்.

என்னிடம் சிகிச்சைக்கு வந்தவருக்கு சுமார் நாற்பது வயது இருக்கும். அவர் பெயர் ராமகிருஷ்ணன் என்று வைத்துக் கொள்வோம். எண்டோஸ்கோப்

மூலமாகச் சோதித்தபோது அவரது உணவுக் குழாயில் நிறைய புண்கள் இருப்பது தெரிந்தது.

"உங்களுக்குக் குடிப்பழக்கம் உண்டா?" என்று கேட்டேன். "இல்லை" என்றார். புகைப் பழக்கமும் இல்லை.

புண்கள் ஆறுவதற்கு மருந்துகளை எழுதிக் கொடுத்துவிட்டு, அமிலம் அதிகம் அடங்கிய உணவுகளைத் தவிர்க்கச் சொன்னேன்.

ஒரு மாதம் கழித்தும், அவருக்குத் தொந்தரவு நீங்கவில்லை.

அதன் பிறகு அவரது தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றிப் பேசத் தொடங்கினேன். ஜவுளி வியாபாரம் செய்யும் அவர், வீட்டில் தினமும் ஒரு பிரச்னையைச் சந்திக்க வேண்டியிருந்தது. அவர் மாடி போர்ஷனில் வசிக்க, அந்த வீட்டின் சொந்தக்காரர் கீழ்ப் பகுதியில் வசித்து வந்தார்.

காலை ஐந்து மணிக்கு எழுந்து மோட்டாரை 'ஆன்' செய்து விடுவாராம் வீட்டுக்காரர். மோட்டாரின் சத்தம் மிக அதிகமாக இருக்க, அது நம் ராமகிருஷ்ணனின் தூக்கத்தைக் கெடுத்துவிட்டிருக்கிறது. இதனால் அவருக்கு எரிச்சல்.

"விடிகாலையிலே எதுக்கு மோட்டாரைப் போடுறீங்க?" என்று சண்டைக்குப் போனார். வீட்டுக்காரரும், "அப்படித்தான் போடுவேன்" என்பதோடு "நீங்களும் அஞ்சு மணிக்கே எழுந்து குளிங்க" என்று இலவச ஆலோசனையையும் அள்ளிவிட்டிருக்கிறார். இப்படி தினமும் வாக்குவாதம்தான்.

மேற்படி பிரச்னை ராமகிருஷ்ணனை உணவுப் பாதை எரிச்சலில் கொண்டு விட்டிருந்தது.

"வியாதி உங்க உடம்பிலே இல்லை. உங்க வீட்டின் கீழ் போர்ஷனிலே இருக்கு. நீங்க ஏன் உங்க வீட்டை மாற்றக் கூடாது" என்று கேட்டேன்.

நான் சொன்னபடியே அவரும் வீட்டை மாற்றினார். அவரது நெஞ்செரிச்சல் தானாகக் குணமாகிவிட்டது! வேறொன்றும் இல்லை. தன்னோடு நியாயம் இல்லாமல் தினமும் சண்டை போட்ட வீட்டுச் சொந்தக்காரரை பார்க்கும்போதெல்லாம், அவர் உடலில் ஹார்மோன்கள் மாறுபட்டு, நெஞ்சில் எதிர்க்களிப்பு தோன்றி, அது நெஞ்செரிச்சலாக மாறியிருந்தது. காரணம் மறைந்த பிறகு விளைவும் மறைந்துவிட்டது.

எனவே உணவுப் பாதையில் பிரச்னை என்றால், கோலேனோஸ்கோப் மூலம் சோதனை செய்துவிட்டு, உணவுப் பாதையில் சிக்கல் இல்லையென்றால், அது மனநலப் பிரச்னைதான் எனப் புரிந்துகொண்டு ஆலோசனைகளைத் தருவதன் மூலம் பல இன்னல்களைத் தீர்க்கலாம்" என்கிறார் டாக்டர் ராஜேந்திரன்.

**– ஜி.எஸ்.எஸ்.**



# கல்கி



2007 அக்டோபர் 21
சர்வஜித் ஐப்பசி 4
மலர் : 66
இதழ் : 12

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

- *பாரதியார்*

## தோல்வியாகிப்போன வெற்றி!

அதிகாரபூர்வமாக அதிபர் என அறிவிக்கப்பட்டதுமே ராணுவ உடையைத் துறந்துவிடுவதாகக் கூறி உச்சநீதிமன்ற தீர்ப்புக்காகக் காத்து நிற்கிறார் முஷாரஃப். தீர்ப்பு வரும்வரை அவரை பாகிஸ்தான் அதிபர் என்று அங்கீகரிக்க முடியாது. ஆனால், தேர்தலில் வென்றிருக்கிறார்! பதிவான 257 வாக்குகளில் 252 முஷாரஃபுக்கே விழுந்திருக்கின்றன! ஆனால், தேர்தலை எதிர்க் கட்சிகள் புறக்கணித்து விட்டதால் இந்தத் தேர்தலில் அவரை எதிர்த்து வாக்களிக்க ஆளே இல்லை! எதிர்க்கட்சித் தலைவர்களான பேனசிர் பூட்டோ, நவாஸ் ஷெரீஃப் ஆகிய இருவருமே நாடு கடத்தப்பட்டு பாகிஸ்தானுக்கு வெளியே இருக்கிறார்கள்.

முஷாரஃபுடன் கூட்டணி கொள்ள முன்வந்த பேனசிர் பூட்டோவின் பி.பி.பி. கட்சி, கடைசி நிமிடத்தில் பின்வாங்கி, தனது வேட்பாளரைத் தனியே நிறுத்த, அவர் ஒரு வோட்டுகூட பெறாமல் தோற்றார்!

தேர்தல் புறக்கணிப்பால் எதிர்த்து வோட்டுப் போடவே ஆள் இல்லாத நிலையில், 'மாபெரும் வெற்றி' பெறுவதில் என்ன அர்த்தம் இருக்க முடியும்! தவிரவும், பாகிஸ்தான் உச்சநீதி மன்றம், முஷாரஃப் தேர்தலில் நின்றதே செல்லாது என்று தீர்ப்பளித்துவிட்டால் என்ன நடக்கும்?

அந்நாட்டின் சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களால் தேர்வு செய்யப்படும் பாகிஸ்தான் அதிபர் தேர்தலில், இம்முறை எந்த ஒரு எதிர்க்கட்சி உறுப்பினரும் வோட்டுப் போடவில்லை.






அவ்வளவு பேரும் தேர்தலைப் புறக்கணித்தது முஷாரஃபின் 'வெற்றி'யையே தோல்வியாக்கியிருக்கிறது! இந்தத் தேர்தலை அரசியல் சாசனத்துக்கு விரோதமானது என்றும் தேசத்தின் அவமானம் என்றும் வர்ணித்துள்ளனர் எதிர்க்கட்சியினர்.

இவ்வளவு காலமாக முஷாரஃப் தலைமையில் ராணுவ ஆட்சியாவது நடைபெற்றது. இப்போதோ ராணுவ ஆட்சியும் இல்லை; முறையான ஜனநாயக ஆட்சியும் இல்லை என்கிற திரிசங்கு நிலை! இதனால், பாகிஸ்தான் மக்களுக்குப் பெரிய தலைவலிதான். முஷாரஃபுக்கு எதிர்ப்புகள் அதிகரிக்கும்; குழப்பம் மேலோங்கும்; நிர்வாகம் சீர்குலையும்.

அண்டை நாடான இந்தியாவுக்கும் இதனால் பிரச்னைகள் அதிகரிக்கும். பாகிஸ்தானில் தழைத்துக் கொண்டிருக்கும் பயங்கரவாத அமைப்புகளின் கொட்டம் பெருகி, இந்திய எல்லைக்குள் அவற்றின் ஊடுருவல் அதிகரிக்கும். இங்கே குண்டுவெடிப்புகள், வன்முறை, உள்ளூர் இளைஞர்களைப் பயங்கரவாதிகளாக்க மூளைச் சலவை செய்யும் முயற்சி, என்று வரிசையாகச் சிக்கல்கள் ஆரம்பிக்கும்.

சமீபத்தில் தலைநகர் டெல்லியில் நடந்த காவல்துறை டி.ஜி.பி.க்கள் கூட்டத்தில், தேசிய பாதுகாப்பு ஆலோசகர் எம்.கே.நாராயணன் அதிர்ச்சி தரும் தகவல்களை வெளியிட்டுள்ளார். ஒஸாமா பின் லேடனின் அல்கொய்தா அமைப்பு, இந்தியாவின் அனைத்து முக்கிய நகரங்களையும் குறிவைத்து திட்டம் தீட்டியிருப்பதாகவும், லஷ்கர், ஜெயிஷ், தவிர சிமி போன்ற உள்ளூர் அடிப்படைவாத அமைப்புகளுடன் இணைந்து ஒரு வலைப் பின்னல் நிறுவியிருப்பதாகவும் தெரிவித்துள்ளார். இந்தப் பயங்கரவாத சங்கிலியின் ஒரு கண்ணியைத் தகர்த்தாலும் அவர்களுடைய திட்டங்கள் பாதிக்கப்படாத அளவுக்கு மாற்றுத் திட்டங்கள் தயார்ப்படுத்தப்பட்டுள்ளன.

பயங்கரவாதத்துக்கு ஆதரவான சூழல் பாகிஸ்தானில் நிலவுவதால் நாம் முன்னெப் போதைக்காட்டிலும் கண் கொத்திப் பாம்பாகப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். அதுமட்டுமின்றி, பயங்கரவாதத்தை ஒடுக்கவும் அழிக்கவும் இந்திய அரசு அவசரத் திட்டம் தீட்டிச் செயல்படுத்த வேண்டும். ●



# ராமர் இருக்கிறார்!

## —இதோ சிலப்பதிகாரச் சான்று

சேது சமுத்திரத் திட்டத்தைக் காரணம் காட்டி ராமபிரான் மற்றும் இராமாயணம் இவற்றை இழிவுபடுத்தியும் கொச்சைப் படுத்தியும் ஒரு சிலர் பேசுவது வருந்தத் தக்கது. திருமால் ராமனாக மண்ணுலகிலே தோன்றி ஒரு மனிதன் எப்படி வாழ வேண்டும் என உதாரணமாக இருந்தவன்.

இதோ சிலப்பதிகாரப் பாடல் :

**தாதை ஏவலின் மாதுடன் போகிக்**
**காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்**
**வேத முதல்வற் பயந்தோன் என்பது**
**நீ அறிந்திலையோ? நெடுமொழி**
**அன்றோ?**

இதன் பொருள் : தந்தை சொல் கேட்டு சீதையுடன் கானகம் சென்று அவளைப் பிரிந்து துன்புற்ற ராமன் பிரும்மதேவனைப் பயந்த திருமாலின் அவதாரம் என நீ அறியவில்லையா?

இதை அறியாததால்தானோ என்னவோ முதலமைச்சர் புதல்வி ஒரு பேட்டியில் 'வைணவர்கள் பெருமாளை வழிபடுகிறார்களே தவிர, ராமனை அல்ல. பிர பந்தங்களும் பெருமாளைக் கூறவில்லை' என்றார் போலும்! ராமபிரானை 'மனத்துக்கினியான்' என்று ஆண்டாள் கூறியிருப்பதை அறியவில்லை!

ராமபிரான் பாலம் கட்டியதாக வால்மீகி கூறியதை நம்பாதவர்களுக்கு வால்மீகி ராமாயணத்தை நன்கு அறியாது பேசுபவர்களுக்கு இதோ சிலப் பதிகாரச் சான்று.

**'நெடியோன்**
**மயங்கி நிலமிசை**
**தோன்றி**
**அடல் அரு முந்நீர் ***
**அடைத்த ஞான்று**
**குரங்கு கொணர்ந்து எறிந்த**
**நெடுமலை எல்லாம்**
**அணங்குடை அரக்கர் வயிறு புக்கு'**

(* முந்நீர் = கடல் - அதாவது ஆற்று நீர், ஊற்று நீர், மழைநீர் சேர்ந்தது)

தயவுசெய்து ஆன்மிகத்தை அரசியல் ஆக்காதீர்கள். மற்றவர்கள் மனத்தைப் புண்படுத்தும்படி பேசாதீர்கள் என்பதைத் தவிர வேறு என்ன சொல்வது?

**– கல்யாணபுரம்**
**ஆர்.ஆராவமுதன்**



**சோ** எழுதிய

# ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

## மஹாபாரதம் பேசுகிறது

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

## வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிகாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்தி லுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

## இந்து தர்மம்

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

விலை ரூ.60/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார் விலை ரூ.120/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 2. | இந்து தர்மம் | 65.00 |
| 3. | வந்தே மாதரம் | 115.00 |
| 4. | வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 5. | சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 6. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 7. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 8. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 9. | துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 10. | அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 11. | இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 12. | யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 13. | சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 14. | மைடியர் பிரம்ம தேவா | 30.00 |
| 15. | இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 16. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 17. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 18. | ஒன்னரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 20. | புரட்சி கீதை | 35.00 |
| 21. | திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 22. | யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 23. | சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 24. | எங்கே போகிறாய்? | 40.00 |
| 25. | என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 26. | இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 27. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 28. | சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 29. | சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 30. | ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 31. | நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 32. | மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 33. | ஏன் கூடாது? | 40.00 |
| 34. | இரவில் சென்னை | 40.00 |
| 35. | முகமது பின் துக்ளக் | 35.00 |
| 36. | உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 37. | சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 38. | எதற்காக? | 35.00 |
| 39. | உண்மையே உன் விலை என்ன? | 37.00 |

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்மைல் ப்ளீஸ் | - சத்யா | ரூ. 40.00 |
| 2. | அரசியல் கலையை அறிந்து கொள்வோம் | - " | ரூ. 40.00 |
| 3. | நையாண்டிக் கட்டுரைகள் | - " | ரூ. 40.00 |
| 4. | அரசியலும் நகைச்சுவையும் | - " | ரூ. 32.00 |
| 5. | நாடு தழுவிய நகைச்சுவை | - " | ரூ. 50.00 |
| 6. | மடாசாமியின் மனசாட்சி | - " | ரூ.100.00 |




(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை - 4. தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at: Srinivasan@alliancebook.com



# சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்

## ஜகஜ்ஜால ஜோடி 12

ஆவி தொழில்நுட்பத்தைப் பற்றி சென்ற இதழில் படித்து வாயடைத்து இருப்பீர்கள். எங்களின் லூப் ஆஃப் ஹென்லே குழலில் நடைபெறும் பண்ட மாற்று முறையையும் பார்த்து விடுவோமா?

இறங்கி ஏறி, ஏறி இறங்கி டைவடிக்கிற ஊட்டி மலையின் கொண்டை ஊசி வளைவுகள் எல்லாம், ஹென்லேயின் 'U' வளைவுக்கு முன்னால் தூசு. பி.சி.டி. சுருண்ட குழல் முடிவடைந்ததுமே தொடங்கும் ஹென்லே குழல், சூடான பார்ட்டி. உலக உருண்டையின் மேற்பரப்பு எவ்வளவு குளிர்ச்சியாக இருக்கிறது. ஆனால், பூமியைக் குடைந்துகொண்டு உள்ளே போகப் போக வெப்பம்... வெப்பம்... இறுதியில் அதன் நடுப்பகுதியை அடையும்போது கொதிக்கும் லார்வா. கிட்டத்தட்ட எங்களது சீதோஷ்ண நிலையும் இப்படித்தான். எங்களது மேல் பகுதியாகிய கார்டெக்ஸில், இரத்தம் ஏகபோகமாகப் பாய்ந்து வருவதால் அது குளிர்ச்சியான பகுதியாக இருக்கிறது. ஆனால், எங்களின் நடுப்பகுதியாகிய மெடுல்லாவுக்கு இரத்த ஓட்டம் துளிகூடக் கிடையாது. கார்டெக்ஸிலிருந்து தவறுதலாகச் சிதறி விழும் கொஞ்சம் ரத்தமும், அதிலிருக்கும் ஆக்ஸிஜனும்தான் மெடுல்லாவுக்குச் சாப்பாடு. எவ்வளவு நாள் பட்டினி கிடந்தாலும் எங்களின் மெடுல்லா எப்போதுமே கூப்பாடு போட்டதில்லை. ஏனென்றால் பூமிப் பந்தின் லார்வாவைப் போல, எப்போதும் சூடாக இருக்க வேண்டும் என்பதுதான் மெடுல்லாவின் அவதார நோக்கம். ஆக, நம்ம ஹாட் பார்ட்டி மெடுல்லாவின் பகுதியில்தான், ஹென்லே குழல் இறங்கி ஏறுகிறது. பி.சி.டி. குழல் நூறு சதவிகிதம் சர்க்கரையை உறிஞ்சுவதுபோல, ஹென்லே நூறு சதவிகிதம் உப்பை உறிஞ்சிக் கொள்கிறது. அதாவது ஹென்லே பண்டமாற்றுச் செய்யாமல் உப்பை உறிஞ்சாது. அதாவது ஒரு மில்லி சோடியத்தை (உப்பை) உறிஞ்சினால், ஒரு மில்லி பொட்டாசியத்தை வெளியே தள்ளிவிடும். இந்தப் பண்டமாற்றத்தில்தான் சிக்கலே ஆரம்பிக்கிறது.

ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு உப்பு, சர்க்கரை இரண்டையுமே மனித சமூகம் கண்டுபிடிக்கவில்லை. ஆனால், இந்த இரண்டுமே தேவையான அளவு உடலுக்குக் கிடைக்காவிட்டால் உயிர் வாழ முடியாது. பிறகு எப்படி உயிர் வாழ்ந்து பல்கிப் பெருகினார்கள்? இயல்பாகவே பழங்கள், காய்கள், தாவரங்கள், தானியங்களில் சர்க்கரையும், உப்பும் தேவையான அளவு கிடைத்தன. ஆதிகாலத்தில் தாவரங்களின் பழங்கள், காய்கள், இலைகளின் வழியே தாவர உப்பாகிய 'பொட்டாசியம்' மனித உடலுக்கு அளவுக்கு அதிகமாகவே கிடைத்து வந்தது. மாறாக சோடியமாகிய உப்பு அதிகம் கிடைக்காத நிலை. இதனால் ஹென்லே உடலில் அதிகமாகச் சேரும் பொட்டாசியத்தை வெளியே தள்ளி விட்டு, அதே அளவுக்கு சோடியத்தை

அய்...

உறிஞ்சிக்கொள்வதற்காக டிசைன் செய்யப்பட்டது. இப்படி இயற்கையுடன் இயைந்து வாழ்வதற்காக வடிவமைக்கப்பட்ட நாங்களும் எங்களது ஹென்லேவும், உங்களின் தற்போதைய தலைகீழ் வாழ்க்கை முறையால், உடலுக்கு அவசியத் தேவையான பொட்டாசியத்தை வெளியே தள்ளிவிட்டு, அதற்குப் பதிலாக உங்கள் உடலில் உபரியாகச் சேரும் உப்பை உறிஞ்சிக் கொள்கிறோம். உப்பு உயர்ந்துகொண்டே செல்வதன் விளைவாக உயர் இரத்த அழுத்தமும் இதய நோயும் உங்கள் உடல் வீட்டின் கதவைத் தட்டுகின்றன. சரி! எங்களது ஹென்லே குழலில் உப்பைச் சகட்டு மேனிக்கு உரியும் டிரான்ஸ்போர்ட்டரை தடுத்துவிட முடியாதா? முடியும்! இதற்குத் தான் 'லாசிக்ஸ்' என்ற மாத்திரையை மருத்துவர்கள் கொடுக்கிறார்கள்.

இந்த மாத்திரையால் எல்லா உப்பும் சிறுநீர் வழியே வெளியே போய்விடும். உப்பை வெளியேற்றும் இந்த மாத்திரை எங்கே போய் வேலை செய்யும்? வேறு எங்கே... எங்களது ஹென்லேவின் ஏறு குழலில்தான். ஹென்லேவின் ஏறு குழலில் மொத்தம் எட்டுவிதமான ஆங்கில மருந்துகள் வேலை செய்யும். இதனால் இந்த வகை மருந்துகளை, 'லூப் டையூரிட்டிக்ஸ்' என்றே அழைக்கிறார்கள். ஆங்கில மருந்துகள் மட்டுமல்ல, ஆயுர்வேத மருந்துகள், மூலிகையில் கிடைக்கும் இரசாயனம் எல்லாம் வேலை செய்வது இந்த இடத்தில்தான்.

உப்புத் தண்ணீரில், அதாவது கடலில் வாழும் மீனைப் பிடித்து நல்ல தண்ணீரில் விட்டால் செத்துவிடும். கடல்மீன் சிறுநீரகம், நல்ல தண்ணீருக்கு ஏற்ப டிசைன் செய்யப்படவில்லை. இப்போது உங்களது மனித சமூகமும், கடலை விட்டு வெளியே வந்த மீனைப் போலத்தான் அலைபாய்ந்து கொண்டிருக்கிறது. கடல் நீரில் கிடைக்கும் இயற்கையான கல் உப்பிலும், நிலத்திலிருந்து வெட்டி எடுக்கப்படும் உப்புத் தாதிலும் சோடியத்தின் அளவு நாற்பது முதல் ஐம்பது சதவிகிதம் மட்டுமே இருக்கும். எஞ்சிய ஐம்பது சதவிகிதத்தில் பொட்டாசியம், மெக்னீசியம் போன்ற சத்துக்கள் இருக்கும். பத்து ஆண்டுகளுக்கு முன்பு வரை, 'உப்பு... உப்பே...!' என்று உப்பள உப்பைக் கொண்டு வந்து தெருக்களில் விற்று வந்தார்கள். இன்று 'பவுடர் சால்ட்' எனப்படும் தூள் உப்பு வந்த பிறகு, தெருக்

■ டாக்டர்
பி.ரவிச்சந்திரன்

# .யோடின்!



## நீங்களுமா?

'மறுமலர்ச்சி' பட இயக்குநர் பாரதியை ஞாபகமிருக்கிறதா? அழகான படத்தைத் தந்தவர், இப்போது 'வள்ளுவன் வாசகி' மூலம் ரீ-என்ட்ரி. "கதைக்காகத்தான் இங்கே இத்தனை தவமும். 'வள்ளுவன் வாசகி' என் முந்தைய படங்களோட சாயல் இல்லாம, அதே நேரத்துல அந்தப் படங்கள் மாதிரியே வெற்றி பெறுவது உறுதி. எது மாதிரியும் இல்லாத ஒரு புது மாதிரியான காதலை உயிர்ப்போடு தந்திருக்கோம். இந்தக் காதலர்கள் இன்றைய காதலர்களா உங்களுக்குத் தெரிய மாட்டாங்க. என்றைக்குமான காதல் பதிவா இருப்பாங்க" என்ற பாரதியிடம்,

'நீங்களும் காதல் வலையில் சிக்கிக் கொள்ள வேண்டுமா?' என்றால், "காதல் தப்புன்னு சொல்லி நான் எந்தப் படமும் தந்ததில்ல. கதைக்குள்ளதான் காதல் இருக்கும். காதலுக்குள்ள கதையைத் தேடுறவன் நான் இல்ல" என்றார் அழுத்தம் திருத்தமாக.

- ரேவதி

களில் ஆரோக்கியத்தை விற்று வந்த வியாபாரிகளும் ஒழிந்து போனார்கள். கூடவே, கல் உப்பின் வழியே உங்களுக்குக் கிடைத்து வந்த பொட்டாசியம், மெக்னீசியம் போன்ற சத்துக்கள் வரும் வழியையும் அடைத்துச் சாத்தினார்கள். ஓர் அதிர்ச்சிகரமான உண்மையைக் கஷ்டப்பட்டு ஜீரணித்துக் கொள்ளுங்கள். பல பெரிய நிறுவனங்கள் தரும் சுத்திகரிக்கப்பட்ட தூள் உப்பில் தொண்ணூறு சதவிகிதம் சோடியம் மட்டுமே உள்ளது. அப்படியானால் இவர்கள் உப்பை எந்த வழிமுறையைப் பயன்படுத்தித் தயாரிக்கிறார்கள் என்பதுதானே நம் எல்லோருடைய கேள்வி.

**சா**தாரண உப்பு உற்பத்தியாளர்களிடமிருந்து உப்பள உப்பை வாங்கி, அதனை எந்திரங்களில் கொட்டி, உடைத்து, உப்பில் உள்ள பொட்டாசியம், மெக்னீசியம், ஜிங்சல்பேட் உள்ளிட்ட முக்கிய சத்துக்களைத் தனியே பிரித்து எடுத்து, இரசாயன உரங்களைத் தயாரித்து விற்பதில் அதிக ஆர்வம் காட்டுகிறார்கள். அதே நேரம் 'சுத்திகரிக்கப்பட்ட, சோடியம் மட்டுமே உள்ள தூள் உப்பில் அயோடின்! அயோடின்!' என்று கூவிக்கூவி சந்தையில் விழுந்து புரண்டு விற்கிறார்கள். ஆனால், அயோடின் வளரும் குழந்தைகளுக்குப் பத்து வயது வரை கிடைத்தால் போதுமானது. அதுவும் பழங்கள், காய்கறிகள் போன்ற இயற்கையான வழியில் கிடைக்கும் அயோடின் மூளை வளர்ச்சிக்கும், மூளைத் தூண்டலுக்கும் பயன்படும். செயற்கையாக அயோடினை அளவுக்கு அதிகமாக எடுத்துக்கொள்ளும்போது, புற்றுநோய் தேடிவரும் வாய்ப்புகள் நிறையவே உண்டு. வளரும் பருவத்தில் உள்ள குழந்தைகளுக்கும், மலைப் பகுதிகளில் வசிப்பவர்களுக்கும்தான் அயோடின் தேவையே தவிர, அறுபது வயது தாத்தா-பாட்டிகளுக்கு அயோடின் தேவையில்லாத இடி அமீன். குழந்தைகள், சிறுவர் - சிறுமியர், வயது முதிர்ந்தவர் என அனைவருக்கும் தேவை பொட்டாசியம்.

இனியாவது விழித்துக்கொண்டு உப்பளத்திலிருந்து வரும் மற்ற சத்துக்கள் நீக்கப்படாத கல் உப்பைக் கூச்சப்படாமல் வாங்கிப் பயன்படுத்த முடியுமா என்று யோசியுங்கள். உப்பளக் கல் உப்பை வாங்கி, உங்கள் வீட்டு மிக்ஸியில் தூளாக்கி வைத்துக்கொள்ளுங்கள். சரி, பொட்டாசியத்தை அளவுக்கு அதிகமாக ஹென்லே வெளியேற்றிவிடுவதால், உடலுக்குத் தேவையான அளவு பொட்டாசியம் கிடைக்காதபோது என்ன நடக்கும்?

(இன்னும் பேசுவோம்)

காதல் பொன்மொழிக் கதை-12

# ஒரு துளி

உமா ஷக்தி

அட்சயா வேகமாக உள்ளே நுழைந்தாள். உதறிய வேகத்தில் செருப்புகள் வலம் இடமாய் மாறி விழுந்தன. கண்களில் அழுகை கட்டிக் கொண்டிருந்தது.

அட்சயா பிடிவாதக்காரி. ஒன்றை நினைத்து விட்டால் அதை எப்படியாவது அடைந்தே தீர வேண்டும்!

சீனிவாசனும் அவளுக்கு இதுவரை எதையும் மறுத்ததில்லை. அருணை அழைத்து வந்து, ''ஹி ஈஸ் மை மேன் டாடி! இவரைத்தான் நான் காதலிக்கிறேன். கல்யாணம் பண்ணிக்கப்போறேன்!'' என்று சொன்னபோது இயல் ாக ஏற்றுக்கொண்டார்.

ஒரே பெண். சாஃப்ட்வேர் இன்ஜினியர். கை நிறையச் சம்பாதிக்கிறாள். அவள் விரும்பும் அருணும் அதே துறைதான். இந்த வயதில் அவன் டெஸிக்னேஷனைக் கேட்டால் தலைசுற்றுகிறது. பெரியதொரு கம்பெனியில் உயர்ந்த பதவியில் இருக்கிறான். அட்சயாவுக்குக் கைக்கு அடங்கியவனாக இருப்பான் என்று தோன்றியது. மறுப்பதற்குக் காரணங்கள் இல்லை. கூடவே, காதல் ஒன்றும் அவர் அறியாத விஷயம் இல்லை.

ஒரு போஸ்ட்மேனாகத் துவங்கிய வாழ்க்கை சீனுவுடையது. அது 1972-ம் வருடம். முதல் போஸ்டிங் சின்னமனூர் கிராமத்தில்.

ஒருநாள் அழுக்குத் துணியைக் கையில் எடுத்துக்கொண்டு படித்துறைக்கு நடையைக் கட்டிய போதுதான் அந்தப் பெண்ணைக் கண்டான்.

''அச்சச்சோ! கன்னுக்குட்டி ஓடுது. பிடிங்க... பிடிங்க! யாராவது பிடிங்களேன்!''

இனிமையான குரல் கேட்டுத் திரும்பியவன், மலைத்துப் போய் நின்றான்.

அழகாகத் துள்ளிக் குதித்தபடி கன்றுக் குட்டி ஒன்று ஓடிவந்து கொண்டிருக்க, அதை மூச்சிரைக்கத் துரத்திக்கொண்டு வந்தாள் அந்த அழகிய தேவதை. கூந்தலும், பாவாடை தாவணியும் பறக்க அவள் வந்ததைப் பார்த்த போது, காற்று அவள் கையைப் பிடித்து அப்போதுதான் விண்ணிலிருந்து இறக்கிவிடுவது போலிருந்தது.

அவளையே பார்த்துக் கொண்டிருந்ததில், ஓடி வந்த கன்றுக் குட்டியை மறந்து போனான் சீனு. அது வந்த வேகத்தில் வயல் வரப்பில் இவனை இடித்துக்கொண்டு செல்ல, பாலன்ஸ் இல்லாமல் தடுமாறி வயலில் விழுந்தான். சேறு பூசிக் கொண்டு இவன் எழுந்து நின்ற போது அவள் அருகில் வந்திருந்தாள்.

''அச்சச்சோ! கன்னுக்குட்டி வருதுன்னு சொன்னேனே, கவனிக்கலையா? அடி ஒண்ணும் படலையே?''- பரிவுடன் அவள் கேட்




# காதல்!

டது புல்லாங்குழல் இசைத்ததுபோல இருந்தது.

"அச்சச்சோ, அது ஓடிடுச்சு. எங்கே போச்சோ? போய்த் தேடணும். ஸாரி! நீங்க பார்த்துப்போங்க!"

அவன் அவளை இன்னொரு முறை பார்ப்பதற்காக, இமைக்க மறந்த விழிகளைச் சற்று இமைத்து மறுபடித் திறந்தபோது அவள் காணாமல் போயிருந்தாள். அந்தப் பெண்ணின் நினைவு சீனுவைத் துரத்திக்கொண்டே வந்தது. ராத்திரியெல்லாம் 'அச்சச்சோ!' காதில் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

"என்னங்க, என்ன ஆச்சு? அப்படி என்ன சிந்தனை?" - சீனிவாசன் மனைவி சியாமளாதான் உலுக்கினாள்.

சட்டென்று உயிர்த்தவர் "அட்சயாபத்திதான் யோசிச்சிக்கிட்டிருந்தேன்" என்றார். சியாமளா நகர, சோபாவில் உர்ரென்று உட்கார்ந்திருந்த அட்சயாவின் தலையைப் பாசத்துடன் வருடிவிட்டார்.

"என்னம்மா பிரச்னை? யார் உன்னைக் கோபப்படுத்தினது?"

"அருணோட அம்மா!"

"அட! அருணோட அம்மா ஊர்லேர்ந்து வந்துட்டாங்களா? என்ன ஆச்சு? அருண் அம்மா என்ன சொன்னாங்க?"

"ம்! அவங்களுக்கு என்னைப் பிடிக்கலையாம்." விம்மலுடன் சொன்னாள்.

"ஏன்?"

"நான் வீட்டுக்குள்ள நுழைஞ்சதும் அவங்க கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கலையாம். ஆனா, நான் வணக்கம் சொன்னேன்ப்பா. அத்தோட நான் மரியாதை இல்லாம கால் மேல கால்போட்டு உட்கார்ந்தேனாம். சத்தியமா நான் வேணும்னு பண்ணலைப்பா. குனிஞ்சு நமஸ்காரம் பண்ணணும்னு ஆசைதான். ஆனா இன்னைக்குன்னு பார்த்து நான் ஜீன்ஸ் போட்டுக்கிட்டுப் போயிருந்தேன். டைட் பேண்ட். எப்படிக் குனிஞ்சு நமஸ்காரம் செய்ய முடியும்? அதோட சாதாரணமா உட்கார்ந்தா அசிங்கமா இருக்குமேன்னுதான் கால் மேல கால் போட்டு உட்கார்ந்தேன்."

"சரி அதனால..."

"அருணோட அம்மா 'இந்தப் பொண்ணுக்கு அடக்கமேயில்லை; சரிப்படாது'ன்னு சொல்லிட்டாங்க."- அழுதாள் அட்சயா.

அவரிடமிருந்து நீண்ட பெருமூச்சு எழுந்தது. அது எப்படி தன்னைப் போலவே இவளுக்கும் நேர்கிறது.

சீனுவுக்கு அந்த 'அச்சச்சோ' பெண்ணைப் பற்றி சில நாட்களிலேயே தெரிந்துவிட்டது. எல்லாம் போஸ்ட்மேன் உத்யோகப் பலனாகத்தான். உள்ளூர் வாத்தியாரின் நான்காவது பெண். பெயர் சித்ரா. மூன்று அக்காக்களுக்குக் கல்யாணம் முடிந்துவிட்டதாம். இவளுக்கு நல்ல வரனாகப் பார்த்துக் கொண்டிருக்கிறாராம் ரிடையர்ட் வாத்தியார்.

ஒரு நாள் சித்ரா தன் தோழியருடன் தெருக்கூத்துப் பார்க்க வந்திருந்தாள். இவனால் நம்ப முடியவில்லை. மணியைப் பார்த்தான். எட்டு. கூத்து முடிந்து இவர்கள் எப்படி வீட்டுக்குப் போவார்கள் என்று கவலைப் பட்டான். சித்ராவின் அருகில் போய் நின்றான். அவள் இவனை சிநேகத்துடன் பார்த்துப் புன்னகைத்தாள்.

"வீட்டுக்கு எப்படிப் போவீங்க?" என்று ஆரம்பித்து அவன் பேச ஆரம்பித்ததும், சரளமாக வெகுநாள் பழகியவள் போல பேச ஆரம்பித்துவிட்டாள். சீனுவுக்குத் தரையில் கால் பாவவில்லை. அவளை வீடுவரை கொண்டு போய்விட்டான். அதன் பிறகு அவர்கள் பலவற்றைப் பற்றி பேசினார்கள்; விவாதித்தார்கள். ஓர் அழகான நேசம் அவர்களிடையே உருவாகியது. ஊரும் அவர்களை உற்றுப் பார்க்க ஆரம்பித்தது.



**"உங்களை மறக்கறதா முடிவு பண்ணிட்டேன். நீங்களும் அம்மா பார்த்த பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கங்க!"**

தன் இதயக் கதவை எப்படித் திறந்து காண்பிப்பது என்று யோசித்த சீனு, கடைசியில் காதல் கடிதம் எழுதி, நடுங்கும் கரங்களால் ஒரு சாயங்காலம் கொடுத்தே விட்டான்.

இவன் அவளிடம் லெட்டர் தருவதைத் தூரத்திலிருந்தே பார்த்துவிட்ட அவள் தந்தை, பதற்றத்துடன் ஓடி வந்தார்.

"யாரு? யாருடா நீ? எதுக்கு என் பொண்ணுக்கு லெட்டர் தர்றே?" என்றார். சீனு திருட்டு முழி முழிக்க, சித்ராதான் சமாளித்தாள்.

"ஐயோ அப்பா, இவர் நம்ம ஊர் போஸ்ட்மேன். நம்ம பக்கத்து வீட்டு அக்கா ஊருக்குப் போயிருக்காங்க இல்ல, அவங்களுக்கு வந்த லெட்டரை என்கிட்ட கொடுத்தார்" என்றவள், சீனுவிடம் திரும்பி, "சரி சார், நான் அவங்க வந்ததுமே கொடுத்திடுறேன்" என்று சொல்லிவிட்டு அப்பாவுடன் போய்விட்டாள்.

**அ**டுத்த நாள்...

படித்துறைக்கு வந்த சித்ரா, சீனுவை நேருக்கு நேராகப் பார்த்தாள். அவள் கண்களிலும் காதல் இருந்தது. "என்ன சீனு இது, நான் உன்னைக் காதலிக்கறேன்னு நேரா சொல்லியிருக்கலாம் இல்லையா? தலையும் புரியாம வாலும் புரியாம ஒரு லெட்டர். அதை நூறு தடவை படிச்சிருப்பேன். உருப்படியா ஒண்ணையும் காணும்" என்று கேலி செய்து அவனைக் காலி செய்தாள்.

அவன் "என்னைப் பிடிச்சிருக்கா" என்றான்.

"ம்" என்றாள் ஒற்றை வார்த்தையில்.

அதன் பின் வந்த நாட்கள் மிகவும் அழகானவை. காதலிக்க இதயம் வேண்டும். காதலிக்கப் படுவதற்கு சில குணங்கள் வேண்டும். அவர்கள் இருவருக்கும் அது நிறைய இருந்தது. அவர்களின் காதலை அங்கிருந்த அருவி ரசித்தது; ஆறு ரசித்தது; அவர்கள் அடிக்கடி செல்லும் மலர்வனம் ரசித்தது; அவர்களின் படித்துறை ரசித்தது.

ஆனால், ஒருவர் மட்டும் ரசிக்கவில்லை. சீனுவின் தாயார்தான் அது.

மகன் ஆசைப்பட்ட காரணத்தால் சித்ராவின் ஜாதகத்தை வாங்கிப் பார்த்தவர், ஒரு நொடியில் அதை நிராகரித்துவிட்டார். அவர்கள் இருவரும் ஒரே கோத்ரம். ஒரே கோத்ரத்தில் சம்பந்தம் பண்ணக் கூடாதாம். அண்ணன் - தங்கை முறை வந்துவிடுமாம்.

"ஏண்டா இப்படி அபச்சாரம் செய்யறே? இதெல்லாம் சரிப்படாது. குலம், கோத்ரம் பார்த்துத்தான் கல்யாணம் பண்ண முடியும். ஒரே கோத்ரம் உள்ள பொண்ணை, தலைகீழா நின்னாலும் உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க மாட்டேன்" தீர்மானமாகச் சொல்லி விட்டாள்.

சீனுவின் காதல் இப்படித்தான் சிதைந்து போனது. பெண்ணின் காதலாவது வெற்றி பெற்று அவள் சந்தோஷமாக இருக்கட்டும் என்று நினைத்தால் அதிலும் சிக்கல்!

**அ**ட்சயா சாப்பிட்டு முடித்து மாடிக்குப் போனாள்; பின்னாலேயே சீனிவாசனும்.

"அருண் என்னம்மா சொன்னான்?" என்று கேட்டார்.

"அவங்க அம்மா சொன்னது என் காதிலே

### இறைவன் வசிக்கும் இடம்!

ஒரு சமயம் இரயிலில் பயணம் செய்த திருமுருக கிருபானந்த வாரியர் அவர்களிடம் எதிரே அமர்ந்திருந்த வாலிபன், "பெரியவரே இது என்ன பட்டை? நன்றாக இருந்த நெற்றியில் வெள்ளை அடித்துள்ளீர்களே" என்றான் கிண்டலாக. அதற்கு வாரியார், "தம்பி, மனிதர்கள் குடியிருக்கும் வீட்டுக்குத்தான் வெள்ளை அடிப்பார்கள். பாழடைந்த வீட்டுக்கு யாரும் வெள்ளை அடிக்க மாட்டார்கள். எனது நெற்றி பாழடைந்ததல்ல; இறைவன் வசிக்கும் இடம். அதனால்தான் அதைச் சுத்தம் செய்து வெள்ளை அடித்திருக்கிறேன்" என்றார் சிரித்தபடியே. பதிலைக் கேட்ட வாலிபன், தன் தவறை உணர்ந்து மன்னிப்புக் கேட்டான்.

- லலிதா செல்லப்பா



விழுந்ததும் நான் எழுந்து வெளியே வந்துட்டேன். அருண் என் பின்னாடியே சமாதானம் சொல்ல வந்தாரு. நான் அவர்கிட்டே சொல்லிட்டேன். எல்லாத்தையும் உதறிட்டு என்கூட வந்திடு. நீ வரலைன்னா எப்பவும் வராதேன்னுட்டேன்.''

''அவன் அம்மா சம்மதிக்காம எப்படிம்மா அவன் கல்யாணம் பண்ணிப்பான்?''

''பண்ணணும்; பண்ணித்தான் ஆகணும்! என்னை மனப்பூர்வமா காதலிச்சது உண்மைன்னா, நான் வேணும்னா அவனோட அம்மாவை விட்டுட்டு வரட்டுமே!''

''தப்பு அட்சயா. அருணுக்கு அப்பா கிடையாது. இறந்துபோயிட்டாருன்னு நீதானே சொன்னே. அம்மாவுக்கு அவன் ஒரே பிள்ளை. பிரிக்கிறது நியாயமா? நீயே சொல்லு.''

சீனுவுக்கு இதைச் சொல்லும்போதே தொண்டை நடுங்கியது. இதே வார்த்தைகளைத்தான் அப்போது சித்ராவும் சொன்னாள்.

அம்மாவின் பிடிவாதத்தை சீனுவால் மாற்ற முடியவில்லை. ஆனால், சித்ராவை எப்படி இழக்க முடியும்? அப்படி இழந்து விட்டால் அதன் பிறகு அவன் வாழ்ந்துதான் என்ன பயன்?

எத்தகைய பெண் சித்ரா! அவன் வேண்டும். வாழ்நாள் முழுக்க இனிய துணையாய்; நேசம் மிகுந்த மனைவியாய். அதுபோதும், எல்லாவற்றையும் ஜெயித்து விடலாம். அதற்காக எதையும் இழக்கத் தயார். ஆனால், சித்ரா அப்படி நினைக்கவில்லை.

''பெத்தவங்க சம்மதம் இல்லாம நாம வாழ்க்கையில் ஜெயிச்சு ஆகப்போறது என்ன? மிஞ்சிமிஞ்சிப் போனா ரெண்டு மூணு குழந்தைகள்... யோசிச்சுப் பார்த்தேன் சீனு... என் அக்காங்க எல்லாம் கல்யாணம் பண்ணிப் பெருசா வாழ்ந்திடலை. ரொம்ப போராட்டம், நிறைய பிரச்னை. எனக்கு ஆண்கள் மேல இருந்த நம்பிக்கை சுத்தமா போச்சு. ஆனா, உங்களைப் பார்த்ததும் மனுஷங்க மேல இருந்த நம்பிக்கை மறுபடி வந்துச்சு. உங்களை இந்த அளவுக்கு நான் விரும்பினதுக்கு எனக்கே காரணம் தெரியலை. காரணங்களைக் கண்டுபிடிச்சு வர்ற இல்லை காதல். அது உன்னதமான ஓர் உணர்வு. உங்களால எனக்கும் என்னால உங்களுக்கும் உருவான இந்த அழகான இரசாயனம்தான் நம்ம காதல். அதோட உங்களோட சுபாவம், மென்மை, ரசனை எல்லாம் எனக்கு ரொம்பப் பிடிச்சது. நான் கொஞ்சமாவும் கனவு கண்டிருந்தா அதுல வர்ற என் நாயகனுக்கு உருவம் கொடுத்தா - அது நிச்சயம் நீங்கதான்பா.

ஆனா சீனு, வாழ்க்கை வேற... கனவு வேற. வாழ்க்கை நிதர்சனங்களால் ஆனது. ஆனா, நாம இப்ப கனவுகள்ல வாழ்ந்திட்டிருக்கோம். எனக்கு உங்ககூட வர்றதில பிரச்னை இல்லை. நம்மளைப் பெத்தவங்க இந்தக் கல்யாணத்துக்கு ஒரு நாளும் சம்மதிக்கப் போறதில்லை... அவங்க வயித்தெரிச்சல் நம்மளை நிம்மதியா வாழவிடாது சீனு. நான் உங்களை மறக்கறதா முடிவு பண்ணிட்டேன். நீங்களும் அம்மா பாத்த பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கங்க.

நான் உங்களையே நினைச்சு உருகிட்டு இருப்பேன்னும் நினைக்காதீங்க. உங்களை போல நல்ல மனசுள்ள யாரையாவது மறுபடி என் வாழ்க்கையில் பார்த்தா தவறவிட மாட்டேன்.''

அவள் தெளிவாகத்தான் இருந்தாள்.

முத்தாய்ப்பாக அவள் சொன்னது

பார்த்திபன் கனவு
வர்ணனைப் போட்டியில்
தேர்வானவை ஐந்து எனக்
கூறிவிட்டு நான்கினை மட்டும்
பிரசுரித்துள்ளீர்களே! மீதி ஒன்று

-சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி.

## இதோ!

இந்தப் பூவுலகை சிருஷ்டித்த இறைவன் கைதேர்ந்த ஒரு கலைஞன் என்பதை நிரூபிப்பதாய் இருந்தது நான் பார்த்த அந்தப் பொற்றாமரைக்குளம்.

அரச சபை அரியாசனத்தில் மன்னர் அமர்ந்திருக்கையில், அவருக்குக் களைத்துவிடக் கூடாதென்பதற்காக மயிற் தோகையில் சாமரம் வீசும் பெண்டிரைப் போல, கரையோரத்தில் நீல வானத்தைத் தொட்டுவிடும் உயரத்தோடும், நல்ல அடர்த்தியோடும் அணிவகுத்து நின்றிருந்த மரங்கள், பூக்களுக்கு வியர்த்து விடக் கூடாதென குளிர் நிழலையும், கிளைகளை அசைத்து இதமான காற்றையும் தந்து கொண்டிருந்தன.

வானத்துக்கோ ஒரே ஒரு நிலாதான். ஆனால், இந்தப் பொய்கையிலோ ஏராளமான நிலாப் பூக்கள். அந்தப் பூக்கள் மொட்டவிழ்க்கும் இரகசிய ஒலியின் சப்தம் தாங்காமல் அன்னப் பட்சிகளும், கூடடைய வந்த குயில்களும் எங்கோ பறந்து விட்டன. பூக்களைச் சுமந்த கர்வத்தால் நீரெல்லாம் தேனாக மாறியிருந்தது. நமக்கெல்லாம் மாதத்தில் ஒருநாள் தான் பௌர்ணமி. அந்தத் தேசத்தில் இருப்பவர்களுக்கோ, இந்தப் பூக்களால் நாளெல்லாம் பௌர்ணமி.

'திருமயம்' பெ.பாண்டியன்

மனத்தை உருக்கியது.

''அம்மாவோட மனசை எப்பவும் தவிக்க விடக் கூடாது சீனு. தாயையும் பிள்ளையையும் தனித்தனியாக்கித் தவிக்க விடறது மகா பாவம். அதை நான் சத்தியமா செய்ய மாட்டேன். ஏன்னா நானும் பின்னாடி தாயாகப் போறவதானே சீனு, ப்ளீஸ்! என் மனசைப் புரிஞ்சுக்குங்க.''

கடைசியாக அவன் கைகளைப் பிடித்துத் தன் மென் இதழால் ஒரு முத்தம் தந்தாள். ''போய்ட்டு வாங்க சீனு, நாம கொடுத்து வெச்சது அவ்வளவுதான்'' என்றாள் நிறைய கண்ணீருடனும் கொஞ்சம் புன்னகையுடனும்.

சித்ரா தனக்குச் சொன்னதையே வரி மாற்றாமல் தன் மகள் அட்சயாவுக்கு உபதேசித்தார் சீனிவாசன்.

''ஐயோ, எனக்குப் புரியுது அப்பா! ஆனா அருண் இல்லாம நான் எப்படி வாழ்வேன்? எனக்கு அவர் வேணும். ஆனா அவரோட அம்மா விடமாட்டாங்க. எனக்கு அவங்களைப் பிடிச்சிருக்குப்பா. அவங்களுக்குத் தான் என்னைப் பிடிக்கலை.''

தன் தோள் மீது தலைசாய்த்து சிறு குழந்தைபோல் அழும் மகளைப் பார்த்த போது சீனுவுக்கு இதயம் வலித்தது.

''பிடிக்கும்மா... பிடிக்கும். உன் காதல் உண்மையானதா இருந்தா அந்தக் காதலே உங்களைச் சேர்த்து வைக்கும். நானும் உன் அம்மாவும் போய் அவங்களைச் சமாதானப் படுத்தப் பார்க்கறோம்'' என்று தேற்றினார்.

சமாதானப்படுத்த தேவையே இருக்கவில்லை.

அருண் வீட்டில் சீனிவாசன் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. சியாமளாதான் வளவளவென்று வாயாடிக் கொண்டிருந்தாள்.

அருண் வீட்டிலிருந்து வந்ததும் மகளிடம் சொன்னாள்.

''அட்சயா, உன் மாமியார் எங்களைப் பார்த்ததும் ரொம்ப வருத்தப்பட்டாங்க. பையன் காதல்ல விழுந்துட்டாங்கற வேகத்துல உன்னை அப்படிப் பேசிட்டாங்களாம். அப்புறம் யோசிச்சுப் பாத்தப்போ, சின்னஞ் சிறுசுகளை எதுக்குப் பிரிக்கணும்; வாழ்ந் துட்டுப் போகட்டும்னு முடிவு பண்ணிட்டாங்களாம். அடுத்த முகூர்த்தத்திலேயே உங்க பொண்ணு என் மருமகளா இங்கே வரட்டும்னு சொல்லிட்டாங்க. அவங்க பெயரைக் கேட்கத்தான் மறந்துட்டேன். சரி, பரவாயில்லை பத்திரிகையில போடறப்போ தெரிஞ்சுக்கலாம்!''என்றாள்.

''எனக்கு இப்பவே தெரியும் சியாமளா. அவங்க பேரு சின்னமனூர் சித்ரா!'' என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டார் சீனிவாசன்.

அவர் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியின் கீழ் விளிம்புகளில் மொட்டாக ஒரு துளி காதல் துளிர்த்து நின்றிருந்தது. ●





# ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரீ ஸமேத
# ஸ்ரீ ஸற்குணேச்வரஸ்வாமி திருக்கோயில்

ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501. ✆ : 04364 273900

## மஹா அன்னாபிஷேகம்

அன்புடையீர்!

அன்னத்திற்கும், அன்னத்தைக் கொண்டு உயிர்வாழும் உயிரினங்கள் அனைத்திற்கும் பதியான பரமேச்வரனுக்கு உயிரினங்கள் காட்டும் நன்றிக் கடனே மஹா அன்னாபிஷேகம். கார் காலம் முடிந்து அறுவடை நடந்து எங்கும் மலை மலையாக நெற்குவியல்கள் நிறைந்து நிற்கும் செழிப்பான காலத்தில் அவனருளால் கிடைத்த அன்னத்தை பயிர்களுக்கு உயிரூட்டி வளர்க்கும் சந்திரன் பூர்ணகலையுடன் விளங்கும் பௌர்ணமி நாளில் பூரண வாழ்வு பெறும் பொருட்டு இறைவனுக்கு அன்னாபிஷேகம் செய்து மகிழ்வது முன்னோர் வகுத்த நெறி.

இந்நெறியைப் பின்பற்றி கீழ்க்கண்ட நிரலின் வண்ணம் **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத ஸற்குணேச்வரப் பெருமானுக்கு மஹா அன்னாபிஷேகம்** நடைபெற இருக்கிறது. அன்பர்கள் அனைவரும் பங்கு கொண்டு இன்னருள் பெற வேண்டுகிறோம்.

நிகழ்ச்சி நிரல்:

| | | |
|---|---|---|
| நாள் | : | ஐப்பசி 8உ 25.10.2007 வியாழக்கிழமை<br>3.00 மணிக்கு மஹாந்யாஸ ருத்ரபாராயணங்களுடன் அபிஷேகம் ஆரம்பம் |
| மாலை | : | 6.00 மணிக்கு மஹா தீபாராதனை |
| மாலை | : | 6.30க்கு விசேஷ பௌர்ணமி பூஜை<br>ஸ்ரீ லலிதா த்ரிசதி அர்ச்சனை |
| இரவு | : | 8.00 மணிக்கு மஹா தீபாராதனை |

இங்ஙனம்,

பொன். சிவசங்கரன் M.A.
நிர்வாக அதிகாரி

**Dr. V.** கிருஷ்ணமூர்த்தி
பரம்பரை தர்மகர்த்தா

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா (Regd).
51, மடத்துத் தெரு, கும்பகோணம் - 612 001
0435-2420047 / 2424660 / 2403772 மற்றும் கிராமவாசிகள்

*ஸ்ரீ ஸற்குணேஸ்வரர் ஸ்வாமி திருக்கோயிலில், இறைவிக்கும், இறைவனுக்கும், ராஜகோபுரங்களும், கோயில் சுற்றுப்பிராகாரத்தில், நூதன ஸற்குண விநாயகர் திருக்கோயிலும், ஸ்ரீவள்ளி தெய்வானை உடனுறை முருகப்பிரானுக்கு, தனித் திருக்கோயிலும் அமைக்க திருப்பணிகள் துவக்கப்பட்டு, நடைபெற்று வருகின்றன. இந்த ஸர்வஜித் வருஷத்துக்குள், இறையருளால் பூர்த்தி செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது. அன்பர்கள் ஒத்துழைப்புடன் நிறைவேறப் பிரார்த்திக்கிறோம்.*



ருத்தி வீரனின் வெற்றியில் அதிகம் அறுவடை செய்தவர் ப்ரியா மணிதான். அடுத்த வெளியீடாக 'மலைக் கோட்டை' வெளிவந்திருக்கிறது. எந்தப் பத்திரிகையைப் புரட்டினாலும் இவர் படம்தான். பருத்தி வீரனுக்குப் பிறகு ஏற்பட்ட மாற்றங்கள் குறித்து நம்மிடம் மனம் விட்டுப் பேசினார்...

‘‘எனக்கு மலைக்கோட்டை மாதிரியான படங்கள்தான் இப்போதைக்கு வேணும். ஏன்னா பருத்தி வீரனுக்குப் பிறகு ஒரேடியா கிராமத்துப் படங்களா வந்து என் முன்னாடி குவிஞ்சது. வெறுத்துப் போயிட்டேன். எனக்குத் தமிழ் சினிமாவைப் பத்தித் தெரியும். ஒண்ணு பண்ணிட்டா அதே மாதிரி கேரக்டர்ஸ்தான் கொடுப்பாங்க. அதனால இனி கொஞ்ச காலத்துக்குக் கிராமத்துப் படங்களே வேண்டாம்னு முடிவு பண்ணிதான் மலைக்கோட்டை பண்ணினேன். மலைக்கோட்டை நல்லா போயிட்டிருக்கு. படம் செம காமெடின்னு எல்லாருமே சொல்றாங்க. இங்க முன்னணி ஹீரோயின்கள் என்னென்ன ரோல் பண்றாங்களோ அதை என்னாலயும் பண்ண முடியும்னு நிரூபிக்கப் போறேன்.

நான் மட்டும் கிளாமரா நடிச்சா ஏன் எல்லோரும் கேள்வி கேக்கறாங்கன்னு எனக்குப் புரியலை. மலைக்கோட்டையில நான் பாடல்கள்ல மட்டும்தான் கிளாமரா நடிச்சிருப்பேன். எனக்கு எல்லா மாதிரியான கேரக்டர்ஸூம் நடிக்கணும். இல்லாட்டி ப்ரியாமணி இந்த மாதிரியான கேரக்டருக்குத்தான் லாயக்குன்னு இங்கே முத்திரை குத்திடுவாங்க.

பருத்தி வீரன் இவ்வளவு பெருசா பேசப்படும்னு நான் நினைக்கவே இல்ல. கிராமத்துப் படம்கிறதால சிட்டியில ஓடாதுன்னு நினைச்சேன். ஆனா சென்னையில் படம் இருநூறு நாட்களைத் தாண்டி ஓடறதைப் பார்க்கும்போது எனக்கு மலைப்பாத்தான் இருக்கு. தமிழ்நாட்டுல எந்த மூலைக்குப் போனாலும் என்னை முத்தழகு, கருவாச்சின்னுதான் கூப்பிடறாங்க. தென்னிந்தியா முழுக்கப் படத்தைப் பத்தி உயர்வா பேசறாங்க. எப்படியோ ஆயுசுக்கும் நினைக்கற மாதிரி ஒரு படம் பண்ணிட்டேன்.

பாரதிராஜா, பாலுமகேந்திரா மாதிரியான டைரக்டர்கள்கூட வேலை பார்த்திருக்கேன். பருத்தி வீரன், மலைக்கோட்டைன்னு ரெண்டு ஹிட் படங்கள்ல தொடர்ந்து நடிச்சிருக்கேன். தமிழும் நல்லாத்தான் பேசறேன். ஆனாலும் இன்னமும் பெரிய



# “இன்னமும் எனக்கு வாய்ப்புகள் அமையலை!”

பேனர்லருந்து என்னை நடிக்கக் கூப்பிடலை. அதுமாதிரியான எந்த வாய்ப்பும் அமையலை. எனக்கும் மத்த நடிகைகள் மாதிரி விக்ரம், விஜய், அஜீத், சூர்யா படங்கள்ல நடிக்கணும்ங்கிற ஆசை நிறையவே இருக்கு.

படம் நல்லா ஓடியும் நடிப்புல யாராவது குறைசொன்னா அப்புறம் அந்த வெற்றியை நம்மால அனுபவிக்க முடியாமப் போயிடும். எனக்கு ஓர் அதிர்ஷ்டம் என்னன்னா, என் படங்கள் சரியா போகாட்டியும் எல்லோரும் மறக்காம என் நடிப்புக்குப் பாராட்டுத் தெரிவிச்சிருக்காங்க. நல்லவேளை, தோல்விலயும் எனக்கு நிறைய பேர் ஆதரவு கொடுத்தாங்க.

ஆரம்பத்துல நான் நடிகையாகப் போறேன்னு சொன்னப்போ என் நட்பு வட்டம் எல்லோரும் ஷாக் ஆனாங்க. நான் நடிப்பையே தொழிலா எடுத்துக்கப் போறேங்கிறதை அவங்களால ஜீரணிக்க முடியலை. ஆனா இப்போ அப்படியே மாறிட்டாங்க. நான் அவங்களைப் பார்க்கப் போனா கட்டாயமா எல்லா சினிமா கதையும் சொல்லியாகணும். நான் யார்கூட நடிக்கிறேன், யார் யார் என்னென்ன என்கிட்ட பேசினாங்கன்னு எல்லாத்தையும் ஆவலா கேட்கறாங்க. நான் பெரிய நடிகை ஆகணும்ங்கறதுதான் இப்போ அவங்களோட கனவு.

எனக்குத் தெலுங்குலயும் நல்ல வரவேற்பு இருக்கு. தமிழ், தெலுங்குன்னு மாறி மாறி நடிச்சுட்டு இருக்கேன். தமிழ்ல ஜீவனோட 'தோட்டா'ங்கிற படம் பண்றேன். கண்டிப்பா தமிழ்ல நம்பர் ஒன் நடிகையாகணும்ங்கறதுதான் என்னோட ஆசை.''

- செந்தில்



**குமார் பக்லயன் – அமெரிக்காவில் வசித்து வரும் பிரபல நரம்பு சிகிச்சை நிபுணர். தாம் பிறந்த ஊரான கேரளாவில் இருக்கும் செம்மணக்கரையின் முன்னேற்றத்துக்காக, தம்முடைய சொந்த சம்பாத்தியத்திலிருந்து இருபது மில்லியன் டாலரை வாரி வழங்கி எல்லோரையும் மனம் நெகிழச் செய்திருக்கிறார்.**



செம்மணக்கரையில் ஏழை தலித் குடும்பத்தில் பிறந்தவர் குமார் பக்லயன். இவர் படித்து முடித்து, டாக்டராகி யு.எஸ்.சுக்குச் சென்று அங்கு ஒரு ரோல்ஸ்ராய்ஸ் கார், ஐந்து மெர்ஸிடிஸ்-பென்ஸ் கார்கள், ஒரு விமானம் என ஆடம்பரமான வாழ்க்கை வாழ்ந்து வருகிறார். எண்பது வயது கடந்ததும், தாம் கடந்து வந்த வாழ்க்கையைப் பற்றி மிகவும் யோசிக்கத் துவங்கினார் குமார் பக்லயன். இறுதியாக, தம்முடைய சொத்தில் பெரும் பகுதியை, தாம் பிறந்த கிராமத்தின் முன்னேற்றத்துக்காகக் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்தார்.

அண்மையில் பேட்டி ஒன்றில், ''நான் பிறந்தபோது எதை எடுத்து வந்தேன்? ஒன்றுமில்லையே! என்

# தாயகத்தை மறக்காத நாயகன்!

கிராமத்து மக்களின் உதவியோடுதான் படித்தேன். என்னிடம் இருக்கும் எல்லாமே அவர்களுக்குத்தான் சொந்தம்!'' என்று முனமுருகிப் பேசியிருக்கிறார்.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு பக்லயன் செம்மணக்கரை கிராமத்துக்குச் சென்றிருந்தார். அந்தக் கிராமம், இவர் படித்து முடித்து அமெரிக்காவுக்குச் சென்ற போது எப்படியிருந்ததோ, அதே நிலையில் இருப்பதைக் கண்டார். ஊரில் சாலை இல்லை; பள்ளிக்கூடம் இல்லை; தண்ணீர் விநியோகம் இல்லை; எந்த சுகாதார வசதியும் இல்லை. ''அங்குள்ள ஒவ்வொருவரையும் பார்த்தேன். நான் அந்த ஊரில் வளர்ந்தபோது, என்ன வறுமை நிலையுடன் இருந்தார்களோ அதே நிலையில்தான் இப்போதும் இருக்கிறார்கள்'' என்று பேட்டியின்போது குறிப்பிட்டிருக்கிறார் பக்லயன்.

இவரது இளமைப் பருவத்தில், இவருடைய தம்பிகள் இருவரும், தங்கையும் சுகாதாரமற்ற குடிநீரைக் குடித்து நோயால் பாதிக்கப்பட்டு, எட்டு வயதுகூட நிரம்பாத நிலையில் மூவரும் துடிதுடித்து இறந்ததை அவரால் இன்றும் மறக்க இயலவில்லை.

''என் தம்பிகளும், தங்கையும் கதறித் துடித்து ஒருவர் பின் ஒருவராக இறந்து போனார்கள். குடும்பத்தில் மூத்தவனான என்னால் அவர்களைக் காப்பாற்ற முடியவில்லை'' என்று எழுபது ஆண்டுகளுக்கு முன்பு நடந்த துன்பத்தை நினைவு கூர்கிறார்.

அடிப்படை வசதியற்ற உள்ளூர் துவக்கப் பள்ளியில் அரிச்சுவடி படித்து, அருகிலுள்ள உயர்நிலைப் பள்ளியில்



பள்ளிக் கல்வியை முடித்து, பிறகு சென்னை மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து படித்திருக்கிறார் பக்லயன். உடனே, கேரள அரசு அவரை இங்கிலாந்துக்கு அனுப்பி, நரம்பு அறுவை சிகிச்சை பயிற்சி பெற்று வரச் செய்திருக்கிறது. அங்கே பக்லயன் ஆறு ஆண்டுகள் தங்கிப் பயிற்சி பெற்று நரம்பு அறுவை சிகிச்சை நிபுணராகத் தாயகத்துக்குத் திரும்பியிருக்கிறார். ஆனால், அவரது தகுதிக்கேற்ற பணி கிடைக்கவில்லை.

''என்னை வைத்து என்ன செய்ய வேண்டும் என்றே இங்கே உள்ளவர்களுக்குத் தெரியவில்லை. நியூரோ சர்ஜரி என்றால் என்னவென்றே பலருக்குப் புரியவில்லை'' என்று வேதனையுடன் குறிப்பிட்ட டாக்டர் குமார் பக்லயன், ''என்னை உருவாக்கிய என் கிராமத்துக்காக என்னால் இயன்ற அனைத்தையும் செய்து என்னுடைய நன்றியைச் செலுத்திவிட்டேன். இந்த அஸ்திவாரத்தோடு, தொடர்ந்து என் கிராமம் மேலும் முன்னேற வேண்டும். அதுவும் என்னுடைய மேற்பார்வை இல்லாமலே அந்த முன்னேற்றப் பாதையில் என் கிராமம் செல்ல வேண்டும். அப்போதுதான் நிம்மதியாக என் உயிர் என்னை விட்டுப் போகும். அப்படி எதுவும் செல்வதற்கு முன் சாகாமல் இருந்திருக்கிறேனே தவிர, வாழ்ந்தேன் என்று சொல்ல இயலாது'' என்கிறார் - நெகிழ்ச்சியுடன்!

ஆதாரம் : **ஹிந்துஸ்தான் டைம்ஸ், மும்பை**

தமிழில் : **சா.ஜெயராஜ்**













## புத்தக விமர்சனம்

**நடிகவேள் எம்.ஆர்.ராதா - சபீதா ஜோசப், நக்கீரன் வெளியீடு, 106/4, ஜானி ஜான்கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14.**

நடிகர் எம்.ஆர்.ராதா பற்றிய சுவையான நூறு தகவல்கள் அடங்கிய தொகுப்பு. அவர் நடிகராக மட்டுமல்ல, உண்மையான பகுத்தறிவுவாதியாகவும், உயர்ந்த இலட்சியவாதியாகவும் வாழ்ந்ததற்கான தகவல்கள் புத்தகம் முழுக்க விரவிக் கிடக்கின்றன. வாசகர் மனதை நூற்றுக்கு நூறு வசீகரிக்கும் நூல்.

**சுஜாதாட்ஸ் - சுஜாதா, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 02**

எழுத்தாளர் சுஜாதாவின் கட்டுரைத் தொகுப்பு. ஆன்மிகம் முதல் அறிவியல் விந்தைகள் வரை, அரசியல் முதல் இசை வரை சகல திசைகளிலும் சிந்தனையை விரித்து, விமர்சனக் கண்ணோட்டத்தோடு எழுதப்பட்டவை. வாசகனை அடுத்த தளத்துக்குக் கொண்டு சேர்க்கும் முயற்சி. இந்த நல்ல புத்தகத்துக்கு திருஷ்டிப் பரிகாரம் எழுத்துப் பிழைகள்.

# நூற்றுக்கு நூறு!

**தேகமே கண்களாய் - உத்தமசோழன், திருவரசு புத்தக நிலையம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17**

பார்வையற்றவர்களின் உலகம் ஒலிகளால் நிறைந்தது. கண்களால் பார்க்கப்படுவதைவிட காதுகளால் கேட்டறியப்படும் செய்திகள், கற்பனைக்கு மேலும் மெருகு கூட்டும். இந்த நாவல் முழுக்கப் பார்வையற்றவர்களின் அன்றாட வாழ்க்கை, அவர்கள் சந்திக்கும் பிரச்னைகள், அவர்களுக்குள்ளே பொதிந்து கிடக்கும் திறமைகள், ஆளுமைகள்... இவற்றைச் சுற்றியே பின்னப்பட்டிருக்கின்றன.

**ஈச்வரி ஜகதீச்வரி - ரேவதி சங்கரன், தி லிட்டில் ஃப்ளவர் கம்பெனி, 36, வடக்கு சாலை, மேற்கு சி.ஐ.டி. நகர், சென்னை-35.**

இறைவனை கோயில்களில் வழிபடும்போது ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு விதமான அனுபவங்கள் ஏற்படுகின்றன. பக்தர்களை இறைவன் வெவ்வேறு விதமாக ஆட்கொள்கிறார். இறைவனின் பாதக் கமலங்களைச் சரணாகதி அடைந்தவர்கள் இதனைப் பரிபூரணமாக உணரலாம். அப்படி ஆலயங்களில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைத் தொகுப்பாகத் தந்திருக்கிறார் ரேவதி சங்கரன்.

**- கமலி**

# பிம்பங்களின் உலகம்

■ வசந்தபாரதி

பிம்பங்களே
இப்போது
புவியை ஆள்கின்றன

முதலில் அதை
முற்றிலும்
கேலியாகவே நினைத்தேன்

எனது விரல்களால்
நான் மகிழவும்
வேடிக்கை பார்க்கவும்
ஏற்படுத்திய அது

அதிகாரத்துடன்
அழைத்து மிரட்டுகிறது
வா என்று

இலைகளே
கனிகளைப் பறித்துத் தின்பது
இயல்பானது இன்று

எனக்கான உணவை
என் நிழலே பிடுங்கிக்
கொள்வது
நிதர்சனம்

சுறா விழுங்கும் மீனாய்
விரிந்துகொண்டே போகிறது
பிம்பங்களின் உலகம்




"படம் ரொம்ப அழுகையா இருக்குதுன்னு யாரும் வாங்கலை!"

"அப்புறம் என்னாச்சு?"

"மெகா சீரியலா மாத்தினேன்... இப்ப சக்கைப்போடு போடுது!"

– ஆர்.ரெங்கரத்தினம்

"இண்டர்வியூல கேக்கற கேள்விக்குச் சரியா, ஒழுங்கா பதில் சொல்லுடா..."

"நீங்க கவலைப்படாதீங்கப்பா... யாரும் கேள்வி கேக்கற மாதிரி நான் நடந்துக்க மாட்டேன்!"

– என்.எஸ்.பாலசுப்பிரமணியன்

"உங்க ஃப்ரெண்ட் உங்ககிட்டே கடன் வாங்க வந்திருக்காருன்னு நெனைக்கிறேன்."

"எப்படிச் சொல்றே?"

"நான் சர்க்கரை போடாம கொடுத்த காஃபியை இப்படிப் புகழ்றாரே!"

– மா.கண்ணன்

"ஹீரோயின் வயசோ முப்பது. எப்படி கதைப்படி பதினாறு வயசுப் பெண்ணா காட்டறது?"

"ரொம்ப சுலபம், 16 வயசுல உனக்கு இத்தனை வளர்ச்சியான்னு, ஹீரோ கேட்கற மாதிரி டயலாக் வெச்சிடலாம் சார்!"

–ஆர்.சுந்தரராஜன்







"திருடனை ஏன்யா பிடிக்கலை?"

"திருடனை யாருக்குத்தான் சார் பிடிக்கும்?"

- சாயம் வெ.ராஜாராமன்



"திருட்டுத் தொழிலை விட்டுட்டு மொத்தமா கொள்ளையடிக்க முடிவு பண்ணிட்டியாமே... என்ன செய்யப்போறே?"

"தனிக்கட்சி ஆரம்பிக்கப் போறேன்!"

- வெ.ராம்குமார்

"இளவரசர் நடந்து வர்றாரே! தேரை முல்லைக் கொடிக்குக் கொடுத்துட்டாரா?"

"நீ வேற! தேரை, புலவர் மகள் பூங்கொடிக்குக் கொடுத்துட்டாரு."

- மா.கண்ணன்

"நாம சென்னையை நெருங்கிட்டோம்னு நினைக்கிறேன்!"

"எப்படிச் சொல்றீங்க?"

"குப்பை நாத்தம் அடிக்கத் தொடங்கிடுச்சே!"

- வே.முருகேசன்



## வாசனை!



# கனவின் நுழைவாயில்...



அந்த இளைஞர் ஓவியக் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தார். சிறுவயது முதலே ஓவியத்தில் மிகுந்த ஈடுபாடு. ஒரு பத்திரிகை ஆசிரியரை இரண்டு, மூன்று முறைச் சந்தித்து, தமது ஓவியம் பத்திரிகையில் வெளியாக வாய்ப்புக் கேட்டிருந்தார். ஒவ்வொரு முறையும் அந்தப் பத்திரிகை ஆசிரியர் இளைஞரின் ஓவியங்களைப் பார்த்துவிட்டு, ''சரி, அப்புறம் வரங்க, பார்க்கலாம்'' என்று சொல்லியிருக்கிறார்.

இந்த ஒரே மாதிரியான பதிலால் இளைஞர் அலுத்துவிடவில்லை. தமது முயற்சியையும் விடவில்லை. இதோ இன்னொரு சந்திப்பு. ஆசிரியர் சொன்ன காட்சிக்கேற்ற ஓவியத்துடன் அவர் முன் ஆஜர்! ஆசிரியர் ஓவியத்தைப் பார்க்கிறார், பிறகு இளைஞரை.

''சரிப்பா! நாளையில இருந்து நீ வேலைக்கு வந்துடு. நம்ம பத்திரிகையின் ஓவியர்களில் நீயும் ஒருவன்'' என்றார்.

இளைஞருக்கு மகிழ்ச்சி கொப்பளிக்கும் அதே சமயம், தயக்கமும் மெல்ல எட்டிப் பார்க்கிறது.

''சார்...''

''என்ன?''

''நான் காலேஜ்ல படிச்சுட்டு இருக்கேன். டிப்ளமோ முடிச்சுட்டு வரேனே... அதுவரைக்கும் பகுதி நேர ஓவியனா...''

ஆசிரியர், இளைஞரைப் பார்த்துப் புன்னகைத்து, ''ஓவியம் வரையப்போவது நீயா... உன் டிப்ளமோவா?'' என்று கேட்டார்.

# இது

**மணியம் செல்வன்**

படம் : பொள்ளாச்சி சுந்தரம்



# வந்தியத்தேவன் கை!

இளைஞர் எதுவும் பேசவில்லை. அடுத்த நாளே அந்தப் பத்திரிகையில் சேர்ந்துவிட்டார். அவர்தான் எனது தந்தை மணியம். எனில், பத்திரிகை ஆசிரியர் யார் என்பதைச் சுலபமாக யூகித்து இருப்பீர்களே! ஆம்! அமரர் கல்கி.

கல்கி பத்திரிகை 1941ல் தொடங்கியது. எனது தந்தை 1942ல் பணியில் சேர்ந்தார். வர்மா அவர்களின் ஓவியங்களுடன் 'பார்த்திபன் கனவு' தொடர் அப்போதுதான் வந்துக்கொண்டிருந்தது. பிறகு 'சிவகாமியின் சபதம்' தொடர் வெளியானபோது, அதற்கான லே-அவுட் தந்தைதான் அமைத்தார். பின்னாளில் 'பொன்னியின் செல்வன்' என்ற மகா சரித்திரத் தொடருக்கு ஓவியம் வரையும் வாய்ப்பு வந்தது.

இன்றும் என்னைச் சந்திப்பவர்களில் பலர் பொன்னியின் செல்வனுக்கு அப்பா வரைந்த ஓவியங்களைப் பற்றி சிலாகித்துச் சொல்வர். வயதானவர்கள் மட்டுமல்ல... இன்றைய இளைய தலைமுறையினரும் தெரிந்து வைத்திருக்கிறார்கள். ஒரு நிகழ்ச்சியில் என்னைச் சந்தித்த கல்லூரி மாணவி 'உங்கள் தந்தையாரின் ஓவியங்களைப் பார்த்தேன் சார்' என ஆரம்பித்து நுணுக்கமாக விமர்சித்தார்.

எனக்கு வியப்பு, 'நீங்கள் அவற்றை எங்கே பார்த்தீர்கள்?' என்று கேட்டேன்.

'எனது தாத்தா, கல்கியில் வெளியான பொன்னியின் செல்வன் தொடரை 'பைண்ட்' செய்து வைத்துள்ளார்' என்றார்.

இப்படிப் பலர் இல்லங்களில் பாதுகாக்கப்படும் பொக்கிஷமாக அது விளங்குகிறதென்றால், அதற்குக் காரணம் அமரர் கல்கியும், எனது தந்தையும் எடுத்துக்கொண்ட சிரத்தைதான்! ஓவியத்தில் ஒரு கையைப் பார்த்தே 'இது வந்தியத்தேவன் கை' என்று வாசகர்கள் சொல்லும் அளவுக்கு ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் நுணுக்கமாக வித்தியாசப்படுத்துவார்.

அஜந்தா, இலங்கை போன்ற இடங்களுக்கு அமரர் கல்கி சென்றபோதெல்லாம் எனது தந்தையையும் அழைத்துச் சென்றார். ஓர் ஓவியனை சரித்திரம் நடந்த இடங்களுக்கு அழைத்துச் சென்ற முதல் எழுத்தாளர் கல்கிதான். அங்கே சில இடங்களுக்குச் செல்ல, இப்போதும் பயமாக இருக்கும். 'விஷ பூச்சிகள் இருக்கும். ஜாக்கிரதை' என்பர்.



* மணியம்

ஆனால் 1950களிலேயே இவர்கள் சென்றார்கள். புதர் மண்டிய சாலைகளில் நடந்தார்கள். குகைகளையும் கோயில்களையும் தேடிச் சென்று ஆவணங்களைச் சேகரித்தார்கள். சிதைந்த சிற்பங்களை ஓவியத்தில் முழுமைபடுத்தினார்கள். இத்தகைய உழைப்பினால்தான் காலங்களைக் கடந்து இன்றும் பேசப்படுகிறது.

ஓர் ஓவியன் என்பவன் என்சைக்ளோபீடியாவாக இருக்க வேண்டும். 'ஏற்கெனவே தெரிந்ததுதானே முன்பே பார்த்ததுதானே' என்ற அலட்சியம் கூடாது. திரும்பத் திரும்பத் தெரிந்துகொள்ள வேண்டும். திரும்பத் திரும்பப் பார்க்க வேண்டும். இல்லையெனில் தவறுகள் பதிவாகிவிடும்.

நான் ஆரம்பத்தில் சில தவறுகளைச் செய்துவிட்டேன். 'சிவகாமியின் சபதம்' தொடருக்கு ஓவியம் வரையும்போது...

(அடுத்த வாரம்)

# பார்த்திபன்

## 13. சிவனடியார் கேட்ட வரம்

ராணி மூர்ச்சித்து விழுந்ததும், சற்று தூரத்தில் நின்ற தாதிமார் அலறிக்கொண்டு ஓடி வந்து அவளைச் சூழ்ந்தனர். சிவனடியார், ''நில்லுங்கள்'' என்று அவர்களைத் தடுத்து நிறுத்திவிட்டு, தமது கமண்டலத்திலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்து அவளுடைய முகத்தில் தெளித்தார். உடனே மந்திர சக்தியால் எழுந்ததுபோல, அருள்மொழி கண் விழித்து சிவனடியாரைப் பார்த்தாள்.

''சுவாமி! எனக்கு என்ன நேர்ந்து விட்டது?'' என்று மெலிதான குரலில் கேட்டாள்.

''உனக்கு ஒன்றுமே நேரவில்லை, அம்மா! உன் மகனைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அவனுக்கு ஒரு குறைவும் நேராது என்றும், நிச்சயம் திரும்பி வருவான் என்றும் சொன்னேன்'' என்றார் சிவனடியார்.

அருள்மொழி சற்று சிந்தனையில் ஆழ்ந்திருந்துவிட்டு, ''இல்லை; ஏதோ ரொம்பவும் வேதனை தரும் செய்தி ஒன்றைச் சொன்னீர்கள்'' என்றாள்.

''சக்கரவர்த்தியின் மகளை உன் மகன் பார்க்க நேர்ந்தது என்று கூறினேன். அந்தச் செய்தி உனக்குச் சந்தோஷம் அளிக்குமென்று எண்ணினேன்...''

''ஆமாம்; நினைவு வருகிறது. ஆனால் அது சந்தோஷச் செய்தியா? சோழ நாட்டின் மிகப்பெரிய விரோதி யாரோ, என்னுடைய பதியின் மரணம் எந்தக் கொடிய சத்ருவினால் ஏற்பட்டதோ, இன்று நான் இவ்விதம் ஆதரவற்று அனாதையாயிருப்பதற்கு யார் காரணமோ, அப்பேர்ப்பட்ட பகைவனுடைய மகளைப் பார்த்தா என் மகன் மயங்கிவிட்டான்? விக்கிரமன் உண்மையில் என் வயிற்றில் பிறந்த பிள்ளைதானா..?''

''கொஞ்சம் பொறு அருள்மொழி! அவசரப்பட்டுச் சாபங் கொடுக்காதே!'' என்று சிவனடியார் சிறிது கலக்கத்துடன் கூறினார். அவர் மகா புத்திமானாயிருந்தும் அருள்மொழி இவ்வாறு பொங்குவாள் என்பதை எதிர்பார்க்கவில்லையென்று தோன்றியது.

''இதோ பார், அம்மா! உன்னுடைய தீராத கோபத்துக்கு ஆளான நரசிம்மவர்மனுடைய மகள் அந்தப் பெண் என்பது உன் மகனுக்குத் தெரியாது. அவர்கள் ஒருவரையொருவர் அருகில் நெருங்கியதும் இல்லை. தூரத்திலிருந்து ஒருவரையொருவர் பார்த்ததுதான்! அவர்களுக்குக் கல்யாணமே நிச்சயமாகி விட்டதுபோல் நீ கலக்கமடைய வேண்டாம்!'' என்றார் பெரியவர்.

''நல்லவேளை; என் வயிற்றில பாலை வார்த்தீர்கள். எங்கே இதுவும் அந்தப் பல்லவச் சக்கரவர்த்தியின் சூழ்ச்சியோ என்று நினைத்தேன். சுவாமி! விக்கிரமன் எங்கேயாவது கண் காணாத தேசத்தில் உயிர் வாழ்ந்திருக்கட்டும்; பசிக்கு உணவு இல்லாமலும் தாகத்துக்குத் தண்ணீர் இல்லாமலும் கஷ்டப்பட்டாலும் படட்டும்! ஆனால் அவன் திரும்பி வரவும் வேண்டாம்; எங்கள் பரம விரோதியினுடைய மகளின் மாய வலையில் விழவும் வேண்டாம்!''

''உன்னுடைய இருதய அந்தரங்கத்தை நன்றாகச் சோதித்துப் பார், அருள்மொழி! உன் மகன்

> ''இப்போது நான் உன்னிடம் ஒரு வரம் கேட்கப் போகிறேன். அதை நீ தட்டாமல் கொடுக்க வேண்டும்!''

# கனவு



**அமரர் கல்கி**

சக்கரவர்த்தியின் மகளை மணம் புரிந்துகொள்ள வேண்டுமென்னும் விருப்பம் லவலேசமும் உனக்கு இல்லையா...?''

''அதெல்லாம் அந்தக் காலத்தில், சுவாமி! தங்களிடம் சொல்லுவதற்கு என்ன, வெண்ணாற்றங்கரைப் போருக்கு முன்னால் அந்த மாதிரி ஒரு பைத்தியக்கார ஆசை என் மனத்தில் சில சமயம் தோன்றியதுண்டு. 'அவ்விதம் ஏற்பட்டால் சோழ வம்சத்துக்கும் பல்லவ குலத்துக்கும் உள்ள பகை தீர்ந்துவிடுமே!' என்று நினைத்ததுண்டு. ஆனால், எப்போது என் பிராண நாதர் போர்க்களத்தில் உயிரை இழந்தாரோ, அந்த க்ஷணத்திலேயே அந்த ஆசையை வேருடன் களைந்து எறிந்து விட்டேன். இவ்வளவு நடந்துவிட்ட பிறகு என் மகன் சக்கரவர்த்தியின் மகளைக் கல்யாணம் செய்துகொள்வதைவிட, அவன் இறந்துவிட்டான் என்ற செய்தியே எனக்கு மகிழ்ச்சியைத் தரும்!''

''அருள்மொழி! நீ அந்தக் குழந்தை குந்தவியைப் பார்த்ததில்லை; அதனால் தான் இப்படியெல்லாம் வெறுப்பாகப் பேசுகிறாய்...''

''தாங்கள் பார்த்திருக்கிறீர்களா, சுவாமி!''

''பார்த்திருக்கிறேன்; நெருங்கிப் பழகியுமிருக்கிறேன். என்னிடம் குந்தவிக்கு ரொம்பவும் பக்தி விசுவாசமுண்டு. அம்மா! சிவஞான இன்பத்தின் சுவை கண்ட எனக்கு, இந்தக் காலத்தில் வேறு எதன் மீதும் பற்று கிடையாது. ஆனால் அந்தக் குழந்தையின் பாசம் மட்டும் போக மாட்டேன் என்கிறது. அவளோடு இரண்டு நாள் பழகிவிட்டால் நீயும் அவ்விதந்தான் அவளிடம் பாசம் வைப்பாய்...''

''வேண்டாம்! எனக்கு ஒருவரையும் இனிமேல் பார்க்க வேண்டாம்; பழகவும் வேண்டாம். இந்த உலகை விட்டுச் சென்று என் பதியை மீண்டும் அடையும் நாளை நான் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன்...''

''அருள்மொழி! ஒரு காலத்தில் என்னை நீ ஒரு வரம் கேட்டு வாங்கிக்கொண்டாய். அதன்படியே உன் மகனுடைய உயிரைக் காப்பாற்றினேன். உன் பதியின் மரணத் தறுவாயில் நான் அளித்த வாக்கையும் நிறைவேற்றினேன். இதெல்லாம் உண்மையா, இல்லையா?''

''ஆமாம், உண்மைதான்.''

''அதற்கெல்லாம் பிரதியாக இப்போது நான் உன்னிடம் ஒரு வரம் கேட்கப் போகிறேன். அதை நீ தட்டாமல் கொடுக்க வேண்டும்.''

''சிவ சிவா!'' என்று சொல்லிக் கொண்டு அருள்மொழி எழுந்து கைகூப்பி நின்றாள்.



''சுவாமி! இவ்விதம் என்னை அபசாரத்துக்கு உள்ளாக்கலாமா? அடியாளிடம் தாங்கள் வரம் கேட்பதா? எனக்குக் கட்டளையிட வேண்டியவர் தாங்கள்!'' என்றாள்.

''சரி கட்டளையிடுகிறேன். அதைத் தட்டாமல் நிறைவேற்ற வேண்டும்.''

''தங்களுடைய வார்த்தையை நான் தட்டுவேனோ? ஒருநாளும் இல்லை.''

''அப்படியானால் சொல்லுகிறேன், கேள்! என்றைக்காவது ஒரு நாள் சக்கரவர்த்தியின் மகள் குந்தவி உன்னிடம் வருவாள். அவள் தாயில்லாப் பெண். தாயின் அன்பு இன்றி அவளுடைய இருதயம் உலர்ந்து போயிருக்கிறது. அதனால்தான் அம்மா, எனக்குக்கூட அவள்மேல் அவ்வளவு பாசம். அந்தக் குழந்தை உன்னிடம் வரும்போது அவளை நீ நிராகரிக்காதே. அன்புடன் உன் மகளைப்போல் ஏற்றுக்கொள். உன் மனப்புண் ஆறுவதற்கும் அது அனுகூலமாயிருக்கும்!'' என்றார் சிவனடியார். அவருடைய கனிவு ததும்பிய குரலும் வார்த்தைகளும் அருள்மொழியின் மனத்தை உருக்கிவிட்டன.

''தங்கள் ஆணைப்படி நடக்க முயற்சி



செய்கிறேன் சுவாமி! ஆனாலும், எங்கள் குலத்துக்கே ஜன்ம சத்ருவான ஒருவருடைய மகளிடம் நான் அன்பு செலுத்துவது எப்படி...?''

''தந்தை செய்த தீங்குக்காக மகளை வெறுப்பது என்ன நியாயம், அம்மா? மேலும் இன்னொரு விஷயம் சொல்லுகிறேன், கேள். உன் மகனுடைய உயிரைக் காப்பாற்றும் விஷயத்தில் குந்தவிதான் எனக்கு மிகவும் ஒத்தாசையாயிருந்தாள். விக்கிரமனுக்கு மரண தண்டனை நேராமல் தடுப்பதற்கு அவள் எவ்வளவு பிரயத்தனம் செய்தாள் தெரியுமா? இதுநாள் வரையில் தந்தையின் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசி அறியாதவள், விக்கிரமனுக்காகச் சக்கரவர்த்தியிடம் எவ்வளவோ சண்டை பிடித்தாள்...''

''அப்படியா, சுவாமி? அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டுமென்று எனக்கும் ஆசை உண்டாகிறது. ஆனால், அவன் எதற்காக இந்த அபாக்கியசாலியைத் தேடிக் கொண்டு வரப்போகிறாள்?''

''இல்லை, அம்மா! இல்லை. நீ அபாக்கியசாலி இல்லை. விக்கிரமனைப்



போன்ற வீரப் புதல்வனைப் பெற்ற உன்னை அபாக்கியசாலி என்று சொல்ல முடியுமா? குந்தவியும் உன்னைத் தேடிக்கொண்டு வரத்தான் போகிறாள்; சீக்கிரத்திலேயே வருவாள்!'' என்றார் சிவனடியார்.

## 14. "வயதான தோஷந்தான்!"

அந்த நாளில் தமிழகத்தில் சைவ சமயமும் வைஷ்ணவ சமயமும் புத்துயிர் பெற்றுத் தளிர்க்கத் தொடங்கியிருந்தன. இவ்விரு சமயங்களிலும் பெரியார்கள் பலர் தோன்றி திவ்ய ஸ்தல யாத்திரை என்ற விஜயத்தில் தமிழ்நாடெங்கும் யாத்திரை செய்து, பக்திச் சுடர் விளக்கு ஏற்றி, ஞான ஒளியைப் பரப்பி வந்தார்கள். அமுதொழுகும் தமிழில் கவிதாரஸமும் இசை இன்பமும் ததும்பும் தெய்வீகப் பாடல்களை இயற்றி வந்தார்கள்.

அந்நாளில் தமிழகத்தில் வாழ்ந்து வந்த சைவப் பெரியார்களுக்குள்ளே திருநாவுக்கரசர் இணையற்ற மகிமையுடன் விளங்கினார். மகேந்திரவர்மச் சக்கரவர்த்தியின் காலத்திலேயே பிரசித்தி அடைந்து, தமிழகத்தின் போற்றுதலுக்கு உரியவராகிவிட்ட அப்பர் சுவாமிகள், விக்கிரமன் நாடு கடத்தப்பட்டபோது, முதிர்ந்த மூப்பின் காரணமாக அதிகமாய் நடமாடவும் இயலாத தள்ளாமையை அடைந்திருந்தார். அந்தத் தள்ளாத பிராயத்திலும் அவர் ஸ்தல யாத்திரை சென்றிருந்து சமீபத்தில் திரும்பி வந்திருக்கும் செய்தியை குந்தவி தேவி அறிந்தாள். அப்பெரியாரைத் தரிசிப்பதற்காக காஞ்சியில் பிரசித்தி பெற்று விளங்கிய சைவ மடாலயத்துக்கு ஒருநாள் அவள் சென்றாள்.

முதிர்ந்து கனிந்த சைவப் பழமாக விளங்கிய அப்பர் சுவாமிகள், சக்கரவர்த்தியின் திருமகளை அன்புடன் வரவேற்று ஆசி கூறினார்.

அவரைப் பார்த்து குந்தவி, ''சுவாமி! இவ்வளவு தள்ளாத நிலைமையில் எதற்காகத் தாங்கள் பிரயாணம் செய்ய வேண்டும்? தாங்கள் தரிசிக்காத ஸ்தலமும் இருக்கிறதா? எங்கே போயிருந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

அதற்கு அப்பர், ''குழந்தாய்! தில்லைப் பதி வரையிலேதான் போயிருந்தேன். பொன்னம்பலத்தில் ஆடும் பெருமானை எத்தனை தடவை தரிசித்தால்தான் என்ன? இன்னுமொருமுறை கண்ணாரக் கண்டு இன்புற வேண்டுமென்ற ஆசை உண்டாகத்தான் செய்கிறது. ஆகா! அந்த ஆனந்த நடனத்தின் அற்புதத்தைத்தான் என்னவென்று வர்ணிப்பேன்! அந்தப் பேரானந்தத்தை அனுபவிப்பதற்காக மீண்டும் மீண்டும் மனிதப் பிறவி எடுக்கலாமே!'' என்று கூறிவிட்டு, பாதி மூடிய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, பின்வரும் பாசுரத்தைப் பாடினார்:-

***"குனித்த புருவமும், கொவ்வைச் செவ்***
***வாயில் குமிழ் சிரிப்பும்***
***பனித்த சடையும் பவளம் போல்***
***மேனியில் பால் வெண்ணீறும்***
***இனித் தமுடைய எடுத்த பொற்***
***பாதமும் காணப்பெற்றால்***
***மனித்தப் பிறவியும் வேண்டுவதே***
***இந்த மாநிலத்தே!''***

பாட்டு முடிந்த பிறகும் அப்பர் சுவாமிகள் சற்று நேரம் மெய் மறந்து பரவச நிலையில் இருந்தார். முன்பெல்லாம் இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் குந்தவி பக்திப் பரவசமடைந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கியிருப்பாள். ஆனால், இன்றைக்கு அவள் மனம் அவ்வாறு பக்தியில் ஈடுபடவில்லை.

அப்பர் ஒருவாறு சுய உணர்வு அடைந்தபோது குந்தவி அவரை நோக்கி, ''சுவாமி சோழ நாட்டில் யாரோ ஒரு சிவனடியார் புதிதாகத் தோன்றி ராஜரீகக் காரியங்களிலெல்லாம் தலையிடுகிறாராமே, தங்களுக்கு அவரைத் தெரியுமா?'' என்று வினவினாள்.



**"நரசிம்மவர்மச் சக்கரவர்த்தியின் ஆட்சியில் சிவனடியார்கள் எதற்காக ராஜரீகக் காரியங்களில் ஈடுபட வேண்டும்?"**



அவளுடைய வார்த்தைகளை அரைகுறையாகவே கேட்ட அப்பெரியார், "என்ன, குழந்தாய்! சோழ நாட்டில் தோன்றியிருக்கும் சிவனடியாரைப் பற்றிக் கேட்கிறாயா? ஆகா அவரைப் பார்க்கத் தானே அம்மா, நான் முக்கியமாக யாத்திரை கிளம்பினேன்? நான் அவரைப் பார்க்க வருகிறேன் என்று தெரிந்ததும் அவரே என்னைத் தேடிக்கொண்டு புறப்பட்டார். தில்லைப்பதியிலே நாங்கள் சந்தித்தோம். ஆகா! அந்தப் பிள்ளைக்கு 'ஞானசம்பந்தன்' என்ற பெயர் எவ்வளவு பொருத்தம்! பால் மணம் மாறாத அந்தப் பாலருக்கு, எப்படித்தான் இவ்வளவு சிவஞானச் செல்வம் சித்தியாயிற்று? என்ன அருள்வாக்கு! அவர் தாய்ப் பால் குடித்து வளர்ந்த பிள்ளை இல்லை, அம்மா! ஞானப்பால் குடித்து வளர்ந்த பிள்ளை! இல்லாவிட்டால் முகத்தில் மீசை முளைப்பதற்குள்ளே இப்படிப்பட்ட தெய்வீகப் பாடல்களை வெள்ளமாகப் பொழிய முடியுமா...?" என்றெல்லாம் அப்பர் பெருமான் வர்ணித்துக்கொண்டே போனார்.

குந்தவி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். கடைசியில் குறுக்கிட்டு, "சுவாமி! நான் ஒருவரைப் பற்றிக் கேட்கிறேன். தாங்கள் இன்னொருவரைப் பற்றிச் சொல்லுகிறீர்கள். நான் சொல்லும் சிவனடியார், முகத்தில் மீசை முளைக்காதவரல்ல; ஜடா மகுடதாரி; புலித்தோல் போர்த்தவர்" என்றாள்.

"குழந்தாய்! நீ யாரைப் பற்றிக் கூறுகிறாயோ எனக்குத் தெரியாது! ஜடா மகுடத்துடன் புலித்தோல் தரித்த சிவனடியார்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; இந்த மடாலயத்திலேயே நூறு பேருக்கு மேல் இருப்பார்கள்.வேறு ஏதாவது அடையாளம் உண்டானால் சொல்லு!" என்றார் நாவுக்கரசர்.

"நான் சொல்லுகிற சிவனடியார் ராஜரீக விஷயங்களில் எல்லாம் தலையிடுவாராம். என்னுடைய தந்தைக்கு விரோதமாகக் கலகங்களை உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறாராம்..."

"என்ன சொன்னாய், அம்மா! அதிசயமாயிருக்கிறதே! அப்படிப்பட்ட சிவனடியார் யாரையும் எனக்குத் தெரியாது. சைவத்தையும் வைஷ்ணவத்தையும் இரு கண்களைப் போல் காத்து வளர்த்து வருகிறவராயிற்றே உன் தந்தை! நரசிம்மவர்மச் சக்கரவர்த்தியின் ஆட்சியில் சிவனடியார்கள் எதற்காக ராஜரீகக் காரியங்களில் ஈடுபட வேண்டும்? அதுவும் உன் தந்தைக்கு விரோதமாகக் கலகத்தைக் கிளப்புவதா? வேடிக்கைதான்! அப்படியாராவது இருந்தால், அவன் சைவனாகவோ, வைஷ்ணவனாகவோ இருக்கமாட்டான். பாஷாண்ட சமயத்தான் யாராவது செய்தால் தான் செய்யலாம்."

"நான் போய் வருகிறேன், சுவாமி!" என்று குந்தவி அவருக்கு நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு கிளம்பினாள்.

பல்லக்கில் ஏறி அரண்மனைக்குப் போகும்போது அவள் பின்வருமாறு எண்ணமிட்டாள்:-

"முதுமை வந்துவிட்டால் எவ்வளவு பெரியவர்களானாலும் இப்படி ஆகிவிடுவார்கள் போலிருக்கிறது. பேச ஆரம்பித்தால் நிறுத்தாமல் வளவளவென்று பேசிக் கொண்டே போகிறார்! கேட்டதற்கு மறுமொழி உண்டா என்றால், அதுதான் கிடையாது! எல்லாம் வயதான தோஷந்தான்!"

## 15.கடற் பிரயாணம்

இளவரசன் விக்கிரமனை ஏற்றிக் கொண்டு கிளம்பிய கப்பல், சீக்கிரத்திலேயே வேகம் அடைந்து கிழக்கு நோக்கிச்



செல்லத் தொடங்கியது. சிறிது நேரத்துக்கெல்லாம் மாமல்லபுரத்துக் கடற்கரையும், கோயில் கோபுரங்களும், மரங்களின் உச்சிகளும் மறைந்து விட்டன. கரை ஓரத்தில் வெண்மையான நுரைகளுடனும் இரைச்சலுடனும் எழுந்து விழுந்து கொண்டிருந்த சிற்றலைகள் இப்போது காணப்படவில்லை. கடல் நீர், தூய நீல நிறமாயிருந்தது. அந்த நீல நிறப் பரப்பிலே பெரும் பள்ளங்களும் மேடுகளும் மாறி மாறித் தோன்றும்படியாகப் பேரலைகள் பெருமூச்சு விட்டுக் கொண்டே மேலே எழும்பியும் கீழே விழுந்தும் அவதிப்பட்டுக் கொண்டிருந்தன. அதே சமயத்தில் துயரம் நிறைந்த 'ஹோ' என்ற இடைவிடாத புலம்பல் ஒலியும் கேட்டுக் கொண்டிருந்தது.

இவ்விதம் விக்கிரமன் வெளியே கண்ட காட்சியானது, அவனுடைய உள்ளத்தின் நிலைமையைப் பிரதிபலிப்பதாயிருந்தது. கடலின் ஆழத்தில் குடிகொண்டிருக்கும் எல்லையற்ற மோன அமைதியைப் போல், அவனுடைய இருதயத்தின் அடிவாரத்திலும் விவரிக்கவொண்ணாத பரிபூர்ண சாந்தி நிலவிற்று. அதே சமயத்தில் அவனுடைய உள்ளத்தின் மேற்பரப்பில் என்னவெல்லாமோ எண்ணங்கள் அலை அலையாக எழுந்து கொந்தளிப்பை உண்டாக்கின.

பார்த்திப மகாராஜா சோழ நாட்டின் மேன்மையைக் குறித்துத் தாம் கண்ட கனவுகளைப் பற்றிச் சொன்னதெல்லாம் ஒவ்வொன்றாக ஞாபகம் வந்தன. கடற் பிரயாணம் செய்ய வேண்டுமென்று இளம் பிராயத்திலிருந்து அவனுடைய மனதில் குடிகொண்டிருந்த ஆசையும் நினைவுக்கு வந்தது. அந்த ஆசைதான், 'அடடா என்ன விநோதமான முறையில் இன்று நிறைவேறுகிறது? புலிக்கொடி கம்பீரமாகப் பறக்கும் பெரிய பெரிய கப்பல்களில் சோழநாட்டு வீரர் படைகளுடன் பிரயாணம் செய்து கடல்களுக்கப்பாலுள்ள தேசங்களிலெல்லாம் வெற்றிக்கொடி நாட்ட வேண்டுமென்ற மனோரதத்துக்கும், இன்று பல்லவர்களின் சிங்கக்கொடி பறக்கும் கப்பலில் கையும் காலும் சங்கிலியால் கட்டுண்டு தேசப் பிரஷ்டனாய்ப் பிரயாணம் செய்வதற்கும் எவ்வளவு தூரத்துக்கு எவ்வளவு தூரம்!'

இப்படி விக்கிரமன் சிந்தித்துக் கொண்டிருந்தபோதே கப்பலின் தலைவன் சில ஆட்களுடன் அங்கு வந்து விக்கிரமனைப் பிணித்திருந்த சங்கிலிகளை எடுக்கச் செய்தான். "இது ஏன்?" என்று விக்கிரமன் வினவ, "சக்கரவர்த்தியின் ஆணை" என்றான் கப்பல் தலைவன். "என்னை எங்கே கொண்டு போகிறீர்கள்?" என்று விக்கிரமன் கேட்டதற்கு, "இங்கிருந்து பன்னிரண்டு நாள் பிரயாணத்தில் நடுக்கடலிலே ஒரு தீவு இருக்கிறது. அதன் அருகே தங்களை இறக்கி விட்டுவிட வேண்டுமென்று கட்டளை!" என்று மறுமொழி வந்தது. "அங்கே வசிப்பவர்கள் யார்?" என்று விக்கிரமன் மேலும் கேட்டான். "அதெல்லாம் எங்களுக்கு ஒன்றும் தெரியாது. தீவுக்குப் போய்ச் சேரும் வரையில், இந்தக் கப்பலுக்குள்ளே தாங்கள் சுயேச்சையாக எங்கு வேண்டுமானாலும் போகலாம். ஆனால் தப்பிச் செல்வதற்கு மட்டும் யத்தனம் செய்யக் கூடாது; செய்தால் மறுபடியும் தளையிடும்படி நேரும்" என்றான் கப்பல் தலைவன்.



விக்கிரமன் கப்பலுக்குள்ளே அங்குமிங்கும் சிறிது நேரம் அலைந்தான். மாலுமிகளுடன் பேச்சுக் கொடுக்கப் பார்த்ததில் ஒன்றும் பிரயோஜனம் ஏற்பட





வில்லை. அவர்கள் எல்லாரும் விக்கிரமன் சம்பந்தப்பட்டவரை ஊமைகளாகவேயிருந்தனர். பின்னர், கப்பல் மேல் தளத்தின் ஓரமாக அவன் வந்து, வானையும் கடலையும் நோக்கியவண்ணம் முன் போலவே சிந்தனையில் ஆழ்ந்தான்.

சிவனடியாரைப் பற்றி நினைக்கும்போதே மற்றோர் உருவம் விக்கிரமனுடைய மனக்கண் முன் தோன்றியது. அது ஒரு பெண்ணின் உருவம்!

அன்னை அருள்மொழியின் நினைவுதான் எல்லாவற்றிற்கும் முன்னால் நின்றது. அவர் இச்சமயம் என்ன செய்து கொண்டிருப்பார்? என்ன எண்ணிக் கொண்டிருப்பார்? தன்னுடைய முயற்சி நிஷ்பலனாய்ப் போனது பற்றி ஏமாற்றமடைந்திருப்பாரா? பல்லவச் சக்கரவர்த்தியின் முன்னிலையிலே தான் சிறிதும் பணிந்து போகாமல் பேசிய வீர வார்த்தைகளைக் கேட்டுப் பெருமையடைந்திருப்பாரா? தன்னுடைய பிரிவைக் குறித்து வருத்தப்படுவாரா? எப்படியும் அவருக்கு ஆறுதல் கூற சிவனடியார் போயிருப்பாரல்லவா?

உடனே, சிவனடியாரின் ஞாபகம் வந்தது. கப்பல் கரையை விட்டுக் கிளம்பிய தருணத்தில் அந்தப் பெரியவர் எங்கிருந்தோ வந்து குதித்துத் தமது திருக்கரத்தை நீட்டி ஆசீர்வாதம் செய்தாரே? அவருக்குத்தான் நம்மிடத்தில் எவ்வளவு அன்பு!

சிவனடியாரைப் பற்றி நினைக்கும்போதே மற்றோர் உருவம் விக்கிரமனுடைய மனக்கண் முன் தோன்றியது. அது ஒரு பெண்ணின் உருவம். முதல் நாள் காஞ்சிபுரத்து வீதியில் பார்த்த அந்தப் பெண், மறுநாள் மாமல்லபுரத்துக் கடற்கரைக்கு எப்படி வந்தாள்? அவள் யாராயிருக்கும்? ஆகா! அவளுடைய கண்கள்தான் எவ்வளவு நீண்டு படர்ந்திருந்தன? அந்தக் கண்களிலே கண்ணீர் துளிர்த்து நின்ற காரணம் என்ன? தன்னிடத்தில் உள்ள இரக்கத்தினாலா? முன்பின் தெரியாத அந்தப் பெண்ணுக்குத் தன்மேல் இரக்கம் உண்டாவானேன்? இல்லாவிட்டால் தன்னை எதற்காக அவ்வளவு கனிவுடன் பார்க்க வேண்டும்?

இப்படி வெகு நேரம் அவளைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்த விக்கிரமன், சூரியன் மறைந்து நாலு புறமும் இருள் சூழ்ந்ததைக்கூடக் கவனிக்கவில்லை. தற்செயலாகக் கீழே கடலை நோக்கிய போது விண்மீன்கள் தண்ணீரில் பிரதிபலிப்பதைக் கண்டு திடுக்கிட்டான். அத்தனை நேரமும் முன்பின் தெரியாத அந்தப் பெண்ணைப் பற்றியே தான் சிந்தித்துக் கொண்டிருந்ததை நினைத்துச் சிறிது வெட்கமடைந்தான். பிறகு பொன்னனையும் வள்ளியையும் பற்றி எண்ணினான். அவர்களுக்குத் தன் பேரில் எவ்வளவு பிரியம்? இந்த நேரமெல்லாம் அவர்கள் தன்னைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள். அல்லது ஒருவேளை வள்ளியின் பாட்டனைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கலாம். அந்தக் கிழவனுக்குத்தான் என்ன தைரியம்? சோழ நாட்டு ஆண்மக்களெல்லாம் அவனைப் போன்ற வீரர்களாயிருக்கக் கூடாதா?

இருட்டி ஒரு ஜாமம் ஆனபோது, நீலக் கடலைச் செம்பொற் கடலாகச் செய்து கொண்டு கீழ்வானத்தில் சந்திரன் உதயமானான். பூரண சந்திரனில்லை; முக்கால் சந்திரன்தான். பார்ப்பதற்கு ஒரு பெரிய பொற்கிண்ணம் கடலிலிருந்து வெளிக் கிளம்புவது போலிருந்தது. முன்னம் பாற்கடலைக் கடைந்தபோது இந்தச் சந்திரனாகிய பொற்கிண்ணத்திலேதான் அமுதம் வந்ததோ, என்னவோ? இன்றும் அப்பொற்கிண்ணத்திலிருந்து நிலவாகிய அமுதம் பொங்கிப் புவனமெல்லாம் பரவியதாகத் தோன்றியது.

இந்த மோகனக் காட்சியை விக்கிரமன் பார்த்தான். கடலிலிருந்து எழும்பிய சந்திர பிம்பத்துடனேகூட அவனுடைய மனக்கண்ணின் முன்னால் அந்தப் பெண்ணின் முகமும் மறுபடி எழுந்தது. இந்த உதய

சந்திரனுடைய பொன்னிறந்தான் அவளுடைய முகத்தின் நிறமும்!

'ஆகா! அது என்ன அழகான முகம்!' என்ற எண்ணம் அப்போது விக்கிரமனுக்கு முதன் முதலாகத் தோன்றியது. அந்தப் பொன் முகத்தின் அழகை, அதைக் கவிந்திருந்த கருங் கூந்தல் எவ்வளவு நன்றாய் எடுத்துக் காட்டிற்று! ஆம்; நிகரில்லாத சௌந்தரியம் வாய்த்தவள் அந்தப் பெண். சித்திரத்திலும் சிலையிலும் கூட அத்தகைய திவ்ய சௌந்தரியத்தைக் காண்பது அரிதுதான். அவள் யாராயிருக்கும்?

**சக்கரவர்த்தி தன்னை இந்தத் தீவில் விட்டுவரச் சொன்னதின் நோக்கம் என்ன?**

**ப**ன்னிரண்டு தினங்கள் சென்றன. அடிக்கடி குந்தவியைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருந்த விக்கிரமனுக்கு இந்தப் பன்னிரண்டு தினங்கள் போனதே தெரியவில்லை. பதின்மூன்றாம் நாள் பொழுது விடிந்தபோது சூரியோதயமான திசையில் விக்கிரமன் கண்ட காட்சி அவனை ஆச்சரியக் கடலில் மூழ்கடித்தது. ஏனெனில் வழக்கம்போல் சூரியன் சமுத்திரத்திலிருந்து கிளம்பி ஜோதிப் பிழம்பாய் மேலே வருவதற்குப் பதிலாக, பச்சை மரங்களுக்குப் பின்னால் உதயமாகி மேலே ஒளிக்கிரணங்களைப் பரப்பினான். இந்த அபூர்வக் காட்சியைப் பார்த்துக் கொண்டு விக்கிரமன் நிற்கும்போதே கப்பல் தலைவன் அவனை நெருங்கி, ''இளவரசே! அதோ தெரிகிறதே, அந்தத் தீவின் அருகில்தான் தங்களை விட்டு விடும்படி எங்களுக்குக் கட்டளை. தங்களுக்கு நீந்தத் தெரியுமல்லவா?'' என்றான்.



''கரைக்கு எவ்வளவு தூரத்தில் விடுவீர்கள்?''

''ரொம்ப தூரத்தில் விடமாட்டோம். ஒத்தாசைக்கு ஒரு மரக்கட்டையும் போடுவோம்.''

''நான் இறங்க மாட்டேன் என்றால் என்ன செய்வீர்கள்?''

''மரக்கட்டையில் கட்டி மிதக்க விட்டு விடும்படி கட்டளை. தங்களுடைய விருப்பம் என்ன?''

''நானே இறங்கி விடுகிறேன்'' என்றான் விக்கிரமன்.

அவ்வாறே கப்பல் இன்னும் சிறிது கரையை நெருங்கியதும், விக்கிரமனைக் கடலில் இறக்கிவிட்டு ஒரு மரக்கட்டையையும் போட்டார்கள். விக்கிரமன் அதைப் பிடித்துக்கொண்டு சிறிது நேரம் நீந்தியும், சிறிது நேரம் அதன்மேல் உட்கார்ந்து மிதந்தும், கரையை நோக்கிச் சென்றான். கரையை நெருங்க நெருங்க, தூரத்தில் கப்பலிலிருந்து பார்த்தபோது எறும்புக் கூட்டம் மாதிரி காணப்பட்டது உண்மையில் மனிதர்கள் கூட்டமே என்று தெரிய வந்தது.

அந்த மனிதர்கள் யார்? எதற்காகக் கடற்கரையில் வந்து கூடியிருக்கிறார்கள்? அவர்கள் என்ன பாஷை பேசுவார்கள்? சக்கரவர்த்தி தன்னை இந்தத் தீவில் விட்டுவரச் சொன்னதின் நோக்கம் என்ன? - இப்படிப் பற்பல எண்ணங்கள் விக்கிரமனுடைய மனத்தில் அலை அலையாக எழுந்தன.

**(தொடரும்)**

எக்ஸ்ட்ரீமுக்குப் போவதுதான் மனசின் இயல்பு. 'மிதமாயிரு' என்றால் அதனால் முடிவதில்லை. இதற்காகத்தான் சாஸ்திரங்கள், 'இரண்டு எக்ஸ்ட்ரீம்களுக்கும் மாறிமாறிப் போ' என்கிறது. 'மிதமாகச் சாப்பிடு' என்றால் நாக்குக் கேட்க மாட்டேன் என்கிறதா? 'சரி, இதோ பண்டிகைகளைக் கொடுக்கிறோம்; இந்த நாட்களில் அறுசுவையாகச் சாப்பிடு' என்கிறது. ஆனால் இதோடு விடாமல், ஈடு கட்டுவதற்கு விரத, உபவாச தினங்களையும் விதிக்கிறது. இப்படியே சில நாட்களில் 'வாய் கொண்ட மட்டும் கத்து; ஆடு; பாடு' என்று சொல்லிவிட்டு, வேறு சில நாட்களில் 'வாயைத் திறக்கவே திறக்காதே' என்று மௌனத்தை கடைபிடிக்கச் சொல்கிறது. இந்த எல்லாவற்றையுமே தெய்வத்தோடு சம்பந்தப்படுத்திக் கொடுக்கிறது. பித்ரு கார்யம், பஞ்சாயதனம், வைச்வதேவ பலி என்று பலவற்றுக்கும் வழிபாட்டைச் சொல்லும் போது, காம்பன்ஸேட் பண்ண 'நான் பிரம்மமாகவே இருக்கிறேன்' என்று மூக்கைப் பிடித்துக்கொள்ளவும் சொல்கிறது.

வாழ்க்கை அம்சங்களில் தானாக மிதமாக இருக்க முடியாத மனித சுபாவத்துக்கு இப்படி சமய அனுஷ்டானத்தில் இரண்டு எக்ஸ்ட்ரீம்களையும் அப்யாஸம் பண்ணுவதே மிதப்படுத்துவதற்கு வழியாக ஆகிறது. உபவாசத்தால் விருந்தை பாலன்ஸ் பண்ணுவது, மௌனத்தால் உற்சாகக் கூத்தை பாலன்ஸ் பண்ணுவது என்று இப்படி சாஸ்திரப் பிரகாரம் ஓர் எக்ஸ்ட்ரீமால் இன்னொன்றை பாலன்ஸ் பண்ணுகிற பழக்கத்தால், வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் தராசு சமமாக நிற்கிற மிதமான நிலைமை, 'யுக்த'மான நிலைமை கைவருகிறது. இரண்டு விதத்தில் மிகையாக மாறிமாறிப் பண்ணுவதாலேயே மிதம் வந்துவிடுகிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்





# மிதமாயிரு!

# மங்கையர் மலர் அழைக்கிறது!




என்றும் உங்களுடன்

மங்கையர் மலர்

தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!




மாநில அளவில்... பிரம்மாண்டமாய்...
கல்லூரிகளுக்கிடையே...
கலைத்திறமைப் போட்டிகள்!

# பூஞ்சாரல்

2007 - 2008

## ஆட்டம்... பாட்டம்... கொண்டாட்டம்!

**விழுப்புரம்**

27-10-2007 சனிக்கிழமை

**தெய்வானை அம்மாள் மகளிர் கல்லூரி**

சென்னை – திருச்சி டிரங்க் ரோடு, விழுப்புரம் – 605 602

காலை 9 மணி முதல் மாலை 5 மணி வரை ❖ அனைவரும் வருக!



# "மக்கள் டீ.வி. சினிமாவுக்கு எதிரி அல்ல!"

**ஆ**ட்டம், பாட்டம், கொண்டாட்டம் என்கிற பிற சேனல்களின் வழியைப் பின்பற்றாமல், தமிழனைத் தரம் உயர்த்தித் தகுதிப்படுத்தும் பணியில், வெற்றிகரமாக இரண்டாம் ஆண்டில் நடைபோடத் துவங்கியிருக்கிறது மக்கள் தொலைக்காட்சி. சாதனைகளுக்கு மத்தியிலிருக்கும் சவால்கள் குறித்து மக்கள் தொலைக்காட்சியின் முதன்மைச் செயல் அலுவலர் சிவகுமார் நம்மோடு பேசினார்...

"**எ**ங்களின் எல்லா வெற்றிக்கும் பின்பலமாக இருப்பது எங்கள் ஊழியர்கள்தான். அவர்களுக்கு நான் இங்கே மனப்பூர்வமாக நன்றி சொல்கிறேன்" என்றுதான் ஆரம்பிக்கிறார் சிவகுமார்.

"வணிக ரீதியான நிகழ்ச்சிகளுக்கு நாங்கள் முக்கியத்துவம் தராமல் இருப்பது மாதிரியான ஒரு தோற்றம் இங்கு உருவாகியிருக்கிறது. வணிகம் என்பது இங்கே ஆளுக்கு ஆள் வேறுபடுகிற விஷயம். பொழுதுபோக்குக்கு உத்தரவாதம் தரும் எத்தனையோ நிகழ்ச்சிகளைத் தந்து கொண்டுதான் இருக்கிறோம். எங்களின் நிகழ்ச்சிகள் டி.ஆர்.பி.யில் நல்ல ரேட்டிங்கில் இருக்கின்றன. வெகுஜன ரசனைக்கு உட்பட்டு, அதே சமயம் எங்கள் கட்டுப்பாடுகளைத் தளர்த்தாமல், தமிழில் நிகழ்ச்சிகள் தருவது சவாலான விஷயம். அதைத் திறம்பட செய்வதில் மக்கள் தொலைக்காட்சி மகத்தான சாதனை புரிந்து வருகிறது" என்றவரிடம் 'உங்களுடைய முயற்சிக்கு விளம்பர ரீதியிலான வரவேற்பு எப்படியிருக்கிறது?' என்று கேட்டால்,

"எங்களின் முதன்மையான கவனம், நிகழ்ச்சிகள் சிறப்பாக வடிவமைக்கப்பட வேண்டும் என்பதுதான். இரண்டாவது, தமிழர்கள் வாழ்கிற நாடுகளில் மக்கள் தொலைக்காட்சி ஒளிபரப்பாக வேண்டும். பிறகுதான் விளம்பரங்கள். எங்களை நோக்கியும் விளம்பரதாரர்கள் வருகிறார்கள். ஆனால், சாதி சார்ந்த, மூட நம்பிக்கைகள் கலந்த, தனி மனித புகழ்பாடுகிற, ஆங்கிலத்தைத் திட்டமிட்டு உயர்த்துகிற விளம்பரங்களை நாங்கள் நிராகரித்து விடுகிறோம்" என்கிறார்.

"சரி, திரைப்படங்களின் மேல் ஏன் இப்படி ஒரு வெறுப்பு?"

"நாங்கள் திரைப்படத்துக்கு எதிரி அல்ல. ஒரு திரைப்படத்தை ஒரு சகோதரனும் சகோதரியும் சேர்ந்து மன சஞ்சலமில்லாமல் முழுதாகப் பார்க்க முடியும் என்கிற நிலை இன்றைக்கு இல்லை.

தமிழர்கள் கனவிலேயே வாழ்ந்து வருகிறார்கள். திரைப்படத்தைப் பார்க்கும்

போது ஆரம்பிக்கும் கனவு, அது முடிந்த பின்னும்கூட தொடர்கிறது. அதனால்தான் எட்டாம் வயதிலேயே ரசிகர் மன்றங்களில் சேர முடிகிறது. அதில் தொலைந்தவன் அப்படியே காணாமல் போய்விடுகிறான். கலாசார சீரழிவைத் தடுக்கத்தான் நாங்கள் போராடுகிறோம். எங்கள் லட்சியமே 'மண் பயனுற வேண்டும்; மக்கள் பயனுற வேண்டும்' என்பதுதான். எங்கள் நிகழ்ச்சிகள் ஏதாவது ஒரு வகையில் தமிழர்களுக்குப் பயன்பட வேண்டும்.

ஈரான் நாட்டுப் படங்களை ஒளிபரப்பும் உரிமையை வாங்கியிருக்கிறோம். யதார்த்தமான படங்கள் எந்த மொழியில் இருந்தாலும் அதை மக்கள் பார்க்க வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம். இனிவரும் தலைமுறையாவது நல்ல சினிமா எதுவென்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.''

''ஆட்டோ சங்கர், வீரப்பன் என்று தொடர்களில் கிரிமினல்களை நல்லவர்களாகச் சித்திரிக்கும் எதிர்மறைப் போக்கு தேவைதானா?''

''இவர்கள் இரண்டு பேரும் நல்லவர்களா, கெட்டவர்களா என்று நாங்கள் சொல்ல வரவில்லை; நிஜத்தைச் சொல்கிறோம். வீரப்பனுடன் வாழ்ந்தவர்களில் தொண்ணூறு சதவிகிதம் பேர் இன்றைக்கு நம்மோடு வாழ்ந்து வருகிறார்கள். எனவே கற்பனையாகவோ, தவறாகவோ சொல்ல முடியாது. இதில் வரும் நிழல் கதாபாத்திரங்களின் நிஜமான ஆட்கள், ஒவ்வொரு வாரமும் அலைவரிசை மூலமாகப் பார்வையாளர்கள் கேட்கிற கேள்விகளுக்கும் சந்தேகங்களுக்கும் பதில் சொல்லப் போகிறார்கள்.''

''உங்களின் எதிர்கால திட்டம் என்ன?''

''பெரிய அளவில் ஒரு விளையாட்டு நிகழ்ச்சி நடத்தத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். ஆவணப் படங்களுக்கு இன்றைக்குப் பெரிய அளவில் வரவேற்பு இருக்கிறது. இதற்கான மாற்று ஊடகமாக எங்கள் அலைவரிசை இருக்கும்.

இன்னும் கொஞ்ச நாளில் அமெரிக்காவில் வாழ்கிற தமிழர்களும் 'மக்கள் தொலைக்காட்சி'யைப் பார்க்கலாம். ஐரோப்பாவில் வாழ்கிற தமிழர்கள் அதிகம் பார்ப்பது 'மக்கள் தொலைக்காட்சி'யைத்தான். எங்கள் அலைவரிசைக்கு உலகம் முழுக்க வாழும் தமிழர்கள் தரும் உற்சாகம்தான் எங்களை வழிநடத்துகிறது'' என்கிறார் சிவகுமார்.

**- ஜா.தீபா**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**




✸ ஆழ்வார்கள் கண்டுணர்ந்த பெருமாளின் பெருமைகளை நாங்களும் புரிந்து கொள்ளப் பேருதவியாக இருந்தது 'வாரம் ஒரு பாசுரம்'. 'நிறைந்தது' என்ற வார்த்தையில் எங்கள் மனம் நிறைவு கொள்ளவில்லை. அடுத்தது என்ன? சுஜாதாவிடம் எதிர்பார்க்கிறோம்.

**- எஸ்.ஜானகி, உடுமலைப்பேட்டை**

✸ தொடர்ந்து 51 வாரங்கள் அற்புதமாக தொகுக்கப்பட்ட தேன் அமுது வாரம் ஒரு பாசுரம். சுஜாதா எழுத்தில் கலக்க, வேதா ஓவியத்தில் மிரட்டினார்.

**- பொன்விழி, அன்னூர்**

✸ வாரா வாரம் கல்கியில் சுஜாதா விளக்கிய பாசுரங்கள் பெரும்பாலும் புதுசோ புதுசு. வழக்கமாக இலக்கிய மேடைகளிலும், ஆன்மிகச் சொற்பொழிவுகளிலும் வழங்கப்படும் பாசுரங்கள் அல்ல இவை!

**- கே.எஸ்.நாராயணன், சென்னை - 78**

'அரிசி? கோதுமை, இல்லையா? வரவேயில்லையா அல்லது தீர்ந்துவிட்டதா? நாங்கள் யாருமே வந்து வாங்கிக் கொள்ளவில்லையே. பிறகு எப்படித் தீரும்? சரி விடுங்கள். ரவை போடுவதாகச் சொன்னார்களே, அதுவாவது உண்டா? ஓஹோ, ஆர்டர் வரவில்லையா; ரொம்ப சரி. சர்க்கரை இருக்கிறதா சர்க்கரை? மண்ணெண்ணெய்? எப்போது வரும். தெரியுமா?'

முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு திரும்பினார் அந்தப் பெண். இடுப்பில் அமர்ந்திருந்த குழந்தை மிட்டாய் கேட்டு அழுது கொண்டிருந்தது. வீட்டில் குண்டுமணி தானியம் இல்லை. மிட்டாய் கேட்கிறதா மிட்டாய்? இயலாமையின் கோபத்தைக் குழந்தையின் கன்னத்தில் அழுத்தமாகப் பதிவு செய்து விட்டு நடக்க ஆரம்பித்தார் அவர். மேற்கு வங்காளத்தில் உள்ள பங்கூரா என்னும் மாவட்டத்தில் அமைந்திருக்கிறது அவர் வீடு.

படபடக்கும் வெயிலில் காலையில் இருந்து நான்கு முறை நடந்தாகிவிட்டது. இல்லை; இல்லை என்று மட்டுமே சொல்கிறார்கள். ஆர்டர் வரவில்லை; சரக்கு வரவில்லை. எங்கோ ஒரு மூலையில் எதற்காகவோ யாரோ ஸ்டிரைக் நடத்துகிறார்கள். எனவே, லாரி வரவில்லை. இன்னமும் நிறைய.

அந்தப் பெண்ணின் கணவன் சீறினான். 'நீ நகர்ந்து போ... நான் போய்க் கேட்கிறேன்' என்று செருப்பு மாட்டிக்கொண்டு கிளம்பினான். பக்கத்து வீட்டிலிருந்து இரண்டு பேர் வெளியில் வந்தார்கள். 'ரேஷன் கடைக்கா போகிறாய்? இரு நாங்களும் வருகிறோம்.' அந்தத் தெருவைத் தாண்டுவதற்குள் மேலும் பத்துப் பேர் சேர்ந்துகொண்டார்கள்.

கும்பலாகப் போனார்கள். சொன்ன பதிலையே திரும்பச் சொன்னார் அந்த ரேஷன் கடைக்காரர், அலட்சியமாகவும் எரிச்சலுடனும். இந்த முறை அவர்களால் சாத்வீகமாகத் திரும்பிவர முடியவில்லை. காலி வயிறு. சீறும் கோபம். 'என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நாங்கள் என்ன பிச்சை கேட்டா வந்தோம்? கொடுக்கும் காசுக்குப் பொருள்களைக் கொடுக்க வக்கில்லை. எதுவுமே இல்லாத ஒரு கடையை எதற்குத் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறாய்? பூட்டிவிட்டுப் போயேன்.'

முதல் கல் எங்கிருந்து, யாரால் எறியப் பட்டது என்று தெரியவில்லை. கடைக்காரன் வெளியில் வந்து கத்தினான். கும்பல்

# அழித்து



கூடிவிட்டது. வாய்த் தகராறு, அடிதடி தகராறாக மாறியது. தபதபவென்று இருபது பேர் கடையை உடைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தார்கள். கையில் கிடைத்த பொருளை எடுத்துக் கீழே வீசினார்கள். அன்றைய பொழுது தீர்ந்தது.

பரத்வான் மாவட்டத்திலும் பிர்புன்



# புறமும்...

துப்பாக்கியும் உருட்டைக் கட்டையும் கல்லும் செருப்பும் மாறி மாறிப் பேச ஆரம்பித்தன. ஆர்ப்பாட்டக்காரர் ஒருவர் கொலை. நூற்றுக்கும் அதிகமானவர்களுக்குக் காயம். போலீஸ்காரர்கள் பலர் தாக்கப்பட்டனர்.

மாவட்டத்திலும்கூட இதே பிரச்னைதான். எந்தவொரு ரேஷன் கடையிலும் குண்டு மணி தானியம் இல்லை. பத்து நாள்,

# நொறுக்குது!

இருபது நாள் பொறுத்திருந்தார்கள்.

அதற்கு மேல் முடியவில்லை. சீறிப் பாய்ந்து கடைகளை அடித்து நொறுக்க ஆரம்பித்தார்கள். சரக்கு இல்லை என்பதல்ல பிரச்னை. சரக்குகள் கடைகளுக்கு வந்து சேர்ந்துவிட்டன. ஆனால், கடை முதலாளிகள் மூட்டையைக்கூடப் பிரிக்காமல் அப்படியே கள்ளச் சந்தைக்குக் கொண்டு போய்விட்டார்கள். இரட்டிப்புப் பணம் கிடைக்கும். மூலையில், வெறுமனே பதுக்கிவைத்தால்கூட, தேவை அதிகமாகும்போது மேலதிக விலை வைத்து விற்க முடியும். எதற்கு அநாவசியமாகக் குறைந்த விலையில் மக்களுக்கு விநியோகம் செய்து நஷ்டப்படணும்?

பாய்ந்து வந்தது போலீஸ் ஜீப். ஒலி பெருக்கி வைத்துக் கத்த ஆரம்பித்தார்கள்: ''எல்லோரும் கலைந்து செல்லுங்கள். அரசாங்கம் உங்கள் பிரச்னையைத் தீர்த்துவைக்கும். யாரும் வன்முறையில் இறங்கக் கூடாது. மீறுபவர்கள் கைது செய்யப்படுவார்கள்.'' போலீஸ் மீதும் விழுந்தது கல்லடி.

ஃபையர்! அடுத்த சில நிமிடங்களில்

எல்லோருக்கும் நிலம்; எல்லோருக்கும் உணவு. கம்யூனிஸ சித்தாந்தம் முன் வைக்கும் மக்களுக்கான அடிப்படை தேவை இது. இந்த இரண்டு கோரிக்கைகளை முன்வைத்து ரஷ்யாவிலும் சீனாவிலும் க்யூபாவிலும் லத்தீன் அமெரிக்க நாடுகளிலும் கம்யூனிஸ்ட்டுகள் நடத்திக்காட்டிய போராட்டங்கள் பற்பல. பலமான அரசாங்கங்கள் பலவற்றை இந்தக் கோரிக்கைகள் அசைத்து அடித்து வீழ்த்தியிருக்கின்றன.

கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சியில் இருக்கும் மேற்கு வங்காளத்தில் நிலம், உணவு இரண்டும் எரியும் பிரச்னைகளாக நீடிப்பது வேதனையூட்டும் முரண். ஏற்கெனவே, சிங்கூர், நந்திகிராம் விவகாரத்தில் மக்களின் ஏகோபித்த எதிர்ப்புகளை கம்யூனிஸ் கட்சி சம்பாதித்துக் கொண்டுவிட்டது. அது போதாதென்று இப்போது உணவுப் பிரச்னை.

பொதுவாகச் சர்வாதிகாரிகள்தான் மக்களால் வெறுக்கப்படுவார்கள்; எதிர்க்கப்படுவார்கள். மேற்கு வங்காள அரசுக்கு இந்த உண்மை இன்னமும் தெரியாதது ஆச்சரியம். உபரியாக இன்னோர் உண்மை. பசி வந்தால் பறந்து போகும் பத்து விஷயங்களில் ஒன்று அரசாங்கம். ●

**மருதன்**

CRED



கிரெடிட் கார்டு எனப்படும் கடன் அட்டை என்பது இரண்டு பக்கமும் கூர்மையாக இருக்கும் கத்தி. மிகவும் புத்திசாலித்தனமாகவும் திட்டமிட்டும் இதைப் பயன்படுத்தினால் உங்களுக்கு நல்லது. வருவது வரட்டும் என்று அட்டையைத் தேய்த்து ஆடம்பரப் பொருட்களை வாங்கி அடுக்கினால், ஒரு கட்டத்தில் கடன் திருப்பிக் கட்ட முடியாமல் விழி பிதுங்க வேண்டியிருக்கும். தினசரி காலையில் கடன் வசூலிக்கும் அடியாட்கள் முகத்தில் விழிக்க வேண்டியிருக்கும்.

★ 'எங்கள் கடன் அட்டையைப் பயன்படுத்தினால் குறைந்த வட்டி விகிதத்தில் மோட்டார் சைக்கிள் வாங்கலாம்' என்று சொல்வார்கள். நீங்கள் வாகன விற்பனையாளரிடம் எல்லாம் பேசி முடித்து பேரத்தை இறுதி செய்யும்போது பார்த்தால், வட்டி விகிதம் அதிகமாகப் போடப்பட்டிருக்கும். 'என்ன இது?' என்று கேட்டால், 'கடனை பத்து மாதத்தில் திருப்பிக் கட்டினால்தான் குறைந்த வட்டி விகிதம். நீங்கள் பதினெட்டு மாதம் தவணை கேட்கிறீர்களே' என்று நம்மை முட்டாளாக்குவார்கள். வங்கிகள் கொடுக்கும் பல சலுகைகளில் மறைக்கப்படும் சங்கதிகள் அதிகம். அதை அனுபவத்தில்தான் வாடிக்கையாளர் உணர்ந்துகொள்கிறார்.

★ சில கடைகளில் கடன் அட்டை மூலம் பொருட்கள் வாங்கும்போது இரண்டு சதம், மூன்று சதம் என்று சர்வீஸ் சார்ஜ் போடுவார்கள். உண்மையில் மின்னணு கிளியரன்ஸ் அமலுக்கு வந்துவிட்ட இந்தக் காலத்தில், பன்னிரண்டு மணி நேரத்துக்குள் கடைக்காரருக்குப் பணம் கிடைத்துவிடும். இந்நிலையில் சர்வீஸ் சார்ஜ் என்ற பெயரில் கடைக்காரர்கள் சுரண்டல் ஒரு புறம் ஜாம், ஜாமென்று நடக்கிறது.

★ மாதம், பில் வரும் ஒரு குறைந்தபட்சத் தொகையைக் கட்டினால்கூட போதும் என்று பாக்கித் தொகையில் ஐந்து சதத்தைக் குறிப்பிட்டிருப்பார்கள். எக்காரணம் கொண்டும் குறைந்தபட்சத் தொகையை மட்டும் கட்டும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள். காரணம் அந்த நிலையில் உங்களுக்குப் போடப்படும் வட்டி விகிதம் எகிற வாய்ப்புண்டு.

★ நம்மில் பலர் கடன் அட்டை கிடைத்த புதிதில், சுமார் நாலைந்து மாதம் மிக சின்சியராகத் திருப்பிக் கட்டி விடுவார்கள். அந்தச் சமயம் பார்த்து இனிமையான குரலில் 'நீங்கள் அதிர்ஷ்ட வாடிக்கையாளர். உங்களுக்கு எந்தவிதப் பிணையும் இல்லாமல் ஐம்பதாயிரம் ரூபாய் கடன் கொடுக்கிறோம்' என்று வலை போடுவார்கள். 'மாதா மாதம் பில் தொகையோடு தவணை முறையில் கடனைக் கட்டிவிடலாம்' என்று அல்வாத்தனமாகப் பேசி அமுக்குவார்கள்.

# கடைசி வரை விரட்டும் கடன் அட்டைகள்!

இது போன்று கடன் வாங்குவதில் வட்டி விகிதத்தைப் பொறுத்தவரை சொல்லாமல் விடப்படும் விஷயங்களே அதிகம். எனவே கடன் அட்டையின் மூலம் கொடுக்கப்படும் கடனை வாங்குவதில் மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

★ வாடிக்கையாளர்களில் ஐம்பது சதம் பேர் மாதத் தவணையை, கடைசி நாளில்தான் செக் மூலம் கட்டுகிறார்கள். ஆனால் இந்த செக், கிளியரன்ஸில் போய் உங்கள் கணக்கில் சேர மேலும் இரண்டு, மூன்று நாட்கள் ஆகலாம். இந்தக் கூடுதல் நாட்களுக்கும் சில வங்கிகள் 145 ரூபாய் வட்டி போட்டு அடுத்த பில்லில் சேர்த்து விடுகின்றன. 'நான் கடைசி நாளுக்குள் கட்டிவிட்டேனே' என்ற புலம்பல் எடுபடாது. இந்த வகையில் கடன் அட்டை நிறுவனங்கள் கோடிக்கணக்கில் சம்பாதிக்கின்றன. எனவே செக் கொடுப்பதென்றால் கடைசி நாள் வரை தள்ளிப் போடாமல் முன்னமே கொடுத்து விடுவது நல்லது.

★ எல்லா கடன் அட்டைகளிலும் கேஷ் லிமிட், கிரெடிட் லிமிட் என்று உண்டு. கிரெடிட் லிமிட் ஒரு லட்சம் என்றால், கேஷ் லிமிட் அதில் நாற்பது சதம் (நாற்பதாயிரம் ரூபாய்) வரை உண்டு. அறுபதாயிரத்துக்கு பொருட்கள் வாங்கலாம். ஆனால், கார்டைப் பயன்படுத்தி இருபதாயிரம் ரூபாய் பணம் எடுத்து, அடுத்த மாதம் திருப்பிக் கட்டும் போது, முதலில் நேரடியாகப் பணமாக வாங்கிய கடனில் பற்று வைத்துக்கொள்ளாமல், பொருட்கள் வாங்குவதன் மூலம் ஏற்பட்ட கடனுக்குப் பற்று வைத்துக்கொள்கிறார்கள். பொருட்களின் மூலம் வந்த கடன் முழுதும் அடைபட்ட பிறகே, நீங்கள் செலுத்துவது கடனாகப் பெற்ற பணத்துக்குப் பற்றாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. பொருட்கள் மூலமாக உள்ள பாக்கித் தொகைக்கு போடும் வட்டியைவிட, பணத்துக்குப் போடும் வட்டி அதிகம். இந்த வகையில் கோடிக்கணக்கில் வாடிக்கையாளரிடம் சுரண்டுகிறார்கள்.

★ உங்களுக்குக் கொடுக்கப்படும் பின் நம்பரை ரகசியமாக வைத்திருங்கள். 'கார்டை ஒழித்துக் கட்டுவது என்று முடிவெடுத்தால், நான்காக உடைத்து கவரில் போட்டு வங்கி முகவரிக்கு அனுப்பி விடவும். தயவு செய்து முழுதாக அனுப்பிவிடாதீர்கள். தவிர, வங்கியின் ஏஜெண்டுகள் என்று சொல்லிக் கொள்பவர்களிடம் கார்டை கொடுத்து விடாதீர்கள். தொலைந்து போனால் அடுத்த ஐந்து நிமிடத்தில் 'கஸ்டமர் கேரு'க்குத் தகவல் சொல்லவும்.

– கௌசி

★ பத்மஜா, ஸ்ரீவில்லிபுத்தூர்

***சம்சாரத்தோடு சண்டை போடுவீர்களா...? அஃப்கோர்ஸ் வாய்ச் சண்டைதான். உங்கள் இருவரில் யார் ஜெயிப்பார்கள்...?***

கல்யாணத்தன்றே கட்டியவளிடம் கர்ணனாக, தைரிய கவசத்தைத் தாரை வார்த்துக் கொடுத்து, கோழைக் குண்டலத்தைக் காதில் அணிந்துகொண்ட மர(த்துப் போன)த் தமிழன் நான். அவள் என்னோடு போடும் சண்டையில், என் தரப்புக்கு அவ்வப்போது எப்போதாவது மனசுக்குள் மௌனமாகத் திக்கித்திக்கிப் பேசியபடி, மயான அமைதியில் மூழ்கி பங்குகொள்வேன். நிராயுதபாணியாகப் புறமுதுகு காட்டி நின்ற என்னோடு, என் அந்தப்புர எதிரி போட்ட சம்பத்திய 'பாணிக்கிரகண-பட்' யுத்தம் அழுகையில் முடிந்தது. அழுதவர்கள்தான் தோற்றார்கள் என்று வைத்துக் கொண்டால், இருவருமே தோற்றோம். பொலபொலவெனக் கண்ணீர்விட்டு அழுதாள் என் மனைவி. சமாதானப்படுத்த, பட்டுப் புடைவைக்காக கலகலவென கைக்காசை அழுதான் அவள் கணவன்!

★ ரஞ்சனி, சென்னை

***ஆணின் கழுத்தில் பெண் தாலி கட்டும் வழக்கம் வந்தால் என்ன ஆகும்..?***

நூறு திருமணம் செய்து, பெண்களை ஏமாற்றிய லியாகத் அலிகானை எப்போதோ பிடித்திருக்கலாம். கழுத்தில் ஐம்பது, அறுபது தாலி தொங்க, 'லியாகத்-தாலிகானாக' அசடுவழிய மாட்டிக் கொண்டிருப்பான்.

★ ரகுநாதன், மதுரை

***இப்போதிருக்கும் பெற்றோரைவிட சாமியாராக***

ஆசைப்பட்டதில்லை. 'சாமி யார்?' என்று அறிய ஆசைப்படுவதுண்டு. ஆனால் இப்போது இருக்கும் சாமியார் பாப்புலேஷனை திருமூலர் பார்த்தால் 'ஆசை அறுமின் ஆசை அறுமின் சாமியாராகிடும் ஆசை அறுமின்' என்று பாடியிருப்பார்.



த. சத்தியநாராயணன்,
அயன்புரம்

வேறு யாருக்காவது மகனாகப் பிறந்திருந்தால், இன்னும் பெட்டராக இருந்திருக்குமே என்று எப்போதாவது எண்ணியது உண்டா...?

நீங்கள் கேட்ட கேள்விக்கு மரியாதை கொடுத்து 'வேறு யாருக்குப் பிள்ளையாகப் பிறந்திருந்தால் பெட்டராக இருந்திருக்கும்' என்று நான் யோசித்துக் கொண்டிருக்கையில், எங்கப்பா வந்தார்... 'ஏண்டா மோகன், வங்கிக்குப் போய் பணம் கட்டிட்டு வாடான்னா, இப்படிப் பங்கி அடிச்சா மாதிரி கேள்விக்குப் பதிலை யோசிச்சிண்டு, உத்தரத்தைப் பாத்துண்டு உக்காந்துண்டிருக்கியே... உன்னை புள்ளையா பெத்ததுக்கு லோகுவையோ (பக்கத்து விடு), வாசுவையோ (பக்கத்துத் தெரு), சுந்தரையோ (பக்கத்து ஊரு),

## கிரேஸியைக் கேளுங்கள்

# ஆசைப்பட்டதுண்டா?

கப்புவையோ (பக்கத்து நாடு) புள்ளையா பெத்துத் தொலைச்சிருக்கலாம்' என்று ஆவேசமாக எனக்குப் பதிலாக அவர் ஒரு பட்டியலே போட்டார். எங்கே உயிலை மாத்தி எழுதிவிடுவாரோ என்ற பீதியில், நான் உங்கள் கேள்வியை உடைப்பில் போட்டுவிட்டு, ஒழுங்கு மரியாதையாக வங்கிக்கு ஓடினேன்.

★ மல்லிகார்ஜுனன், திருவண்ணாமலை

*சாகா வரம் தரும் அமிர்தம் உங்களுக்குக் கிடைத்தால், அதை நீங்களே குடிப்பீர்களா... அல்லது உங்கள் மனைவிக்குக் கொடுப்பீர்களா...?*

என் சம்சாரத்துக்குத் தெரியாமல் நான் சாப்பிடுவது செவிக்குணவு ஒன்றுதான். மற்றபடி ஆவின் பாலிலிருந்து அமிர்தம் வரை எதை என் மனைவிக்குத் தெரியாமல் சாப்பிட்டாலும், அது என் முகத்தில் அசடாக வழிந்து காட்டிக் கொடுத்துவிடும். அய்யா ஒரு பேச்சுக்கு அந்த அமிர்தத்தை அவளுக்குத் தெரியாமல், வாயும் வாயும் வைத்தாற்போலச் சாப்பிட்டுவிட்டேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். 'சாகா வரம் தரும் அமிர்தத்தை எனக்கு ஏன் தரவில்லை நாதா' என்று ஆயுள் வரை நச்சரிப்பாள். அதுவும் தவிர, இருக்கிற பவர்-கட், பொல்யூஷன், டிராஃபிக் ஜாம் என்கிற ஆயிரெத்தெட்டு அவஸ்தைகளில் நாம் செத்து சுண்ணாம்பாக ஆகிக் கொண்டிருக்கிறோம். இதில் என்ன வெங்காயம் சாகா-வரம்? சாகாமல் இருப்பது வரமில்லை. சாபம்தானென்று தோன்றுகிறது. அமிர்தம் மட்டுமல்ல, அளவுக்கு மீறிய ஆயுசும் விஷம்தான். அளவோடு வாழ்ந்து, வளமோடு சாவோம்.

★ மு.ரா.பாலாஜி,
கோலார் தங்கவயல்

*கணக்கில் தப்புக் கணக்கு சரி. அது என்ன குருட்டுக் கணக்கு...?*

'கிருஷ்ணர் தேவையில்லை. அவரது சேனை, பரிவாரங்கள் கிடைத்தாலே போதுமானது. நாம் பாரதப் போரில் வென்றுவிடலாம்' என்று துரியோதனன் போட்ட கணக்கு தப்புக் கணக்கு. துரியோதனன் போட்ட தப்புக் கணக்கை சரியென்று நம்பி பாரதப் போர் நடக்க, பர்மிஷன் கொடுத்த திருதராஷ்டிரன் போட்டது குருட்டுக் கணக்கு.

★ குலசை க.மீ.நஜிமுதீன்,
காயல்பட்டினம்

*மதயானையை வழிக்குக் கொண்டுவர அங்குசம் தேவை. மனைவியை வழிக்குக் கொண்டு வர...?*

பாசாங்குசம்... அதாவது பாசம் என்கிற அங்குசத்தைக் காட்டி மனைவியை வழிக்குக் கொண்டு வரலாம். பாசம் காட்ட முடியாதவர்கள், அட்லீஸ்ட் பாசாங்கு என்கிற அங்குசத்தையாவது காட்டி, மனைவியின் மதத்தை மாற்றுங்களேன். ●

# நடக்குமென்பார்; நடக்கும்!

**தஞ்சை பரத்வாஜ்**

**மேஷம்** : தந்தை வழியில் நற்பலன்களை அடைவீர்கள். குழந்தைகள் வழியில் இருந்து வந்த மனக்கவலை தீரும். பூர்வீகச் சொத்துகள் பாகப் பிரிவினை ஆகும். நண்பர், உறவினர்கள் வழியில் ஆதாயம் கிட்டும். ராசிக்கு 6ல் புதன் உச்சம் பெற்று இருப்பதால் உடல் ஆரோக்கியம் சீராகும்.

**ரிஷபம்** : தொழில் மாற்றம், வீடு மாற்றம் உண்டு. வேலைப் பளு அதிகரிக்கும். தாயின் உடல்நிலை சற்று நலிவடையும். யாருக்கும் அதிகத் தொகை கடனாகக் கொடுக்கக் கூடாது. பூர்வீக வழியில் ஆதாயத்தை அடைவீர். திருமணக் காரியம் கைகூடும். எதிரிகளால் தொல்லை இருக்கும். சனீஸ்வரனுக்கு விளக்கேற்றி வந்தால் தோஷம் நீங்கும்.

**மிதுனம்** : வெளிவட்டாரத்தில் நல்ல பெயர் கிடைக்கும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். தைரிய ஸ்தானத்தில் சனி, கேது கூடி நற்பலன் உண்டாகும். சிலருக்கு நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். புண்ணியஸ்தலம் செல்லலாம். வேலைப் பளு உயரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வியாழன்தோறும் குரு வழிபாடு செய்துவரவும்.

**கடகம்** : எதிர்பாராத தன யோகத்தை அளிக்கும். பண வரவு சரளமாக இருந்தாலும் முதலீடுகள் செய்யும்பொழுது அவசரப்படாமல் செய்யவும். குடும்ப வாழ்க்கையில் விட்டுக்கொடுத்து அனுசரித்து நடந்துகொள்ளவும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. வாகனங்களில் செல்லும்போது உஷார். உடல் நிலையில் கவனம் தேவை.

**சிம்மம்** : குடும்ப வாழ்வில் சற்று மனக் குழப்பம் காணப்படுவதால் கணவன் மனைவிக்குள் ஒத்துப்போவது நல்லது. கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். வீடு, மனை வாங்கச் சரியான தருணம். எதிலும் தீர ஆலோசனை செய்து முடிவு எடுக்கவும். எதிலும் அவசரம் காட்ட வேண்டாம். வியாழன்தோறும் ஸ்ரீராகவேந்திரரை வழிபட்டு, ஏழைகளுக்குத் தானம் செய்து வந்தால் நற்பலன் கிட்டும்.

**கன்னி** : புண்ணியஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். சிலரது மனத்தில் உற்சாகம் பிறக்கும். எதிர்ப்புகள் விலகும். கடன் சுமை குறையும். வேலையில் மாற்றம் ஏற்படும். எதிர்பாராத செலவுகள் அதிகரிக்கும். உடன்பிறந்தவர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல பலன் கிடைக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும்.

**துலாம்** : குரு பகவான் திடீர் தன யோகத்தை அளிப்பார். பொருளாதாரத்தில் உயர்வு உண்டாகும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பத்திரிகையில் பெயர் வரும். செவ்வாய், வெள்ளிதோறும் ராகு, கேதுவுக்கு விளக்கேற்றிப் பூவைத்து வழிபட்டு வந்தால் நற்பலன் கிட்டும்.

**விருச்சிகம்** : சிலருக்கு வேலை மாற்றம் ஏற்படும். நிர்ப்பந்தம் காரணமாக வெளியூர்களுக்கு மாறுதல் செய்து போக நேரிடும். உற்சாகச் சூழ்நிலை உண்டாகும். திடீர் பண வரவு உண்டு. வீடு, மனை வாங்க ஏற்ற நேரம். உடல்நிலையில் நல்ல பலன் உண்டாகும். தொழில் ஸ்தாபனத்தில் அபிவிருத்தி ஏற்படும். குழந்தைகளிடம் மன சந்தோஷம் ஏற்படும்.

14.10.2007
முதல்
20.10.2007
வரை

என் ராசிக்கு ஜாமீன் கையெழுத்து போட வேண்டாம்னு இருக்கு. இன்னிக்குன்னுப் பார்த்து பொண்டாட்டியும் மச்சானும் சேர்ந்து வர்றாங்க. ஓட வேண்டியதுதான்!

## பரத்வாஜ் பதில்கள் அடுத்த இதழில்...

**தனுசு** : தெய்வ அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் வழியில் நிம்மதி உண்டாகும். வேலையில் முன்னேற்றம், ஊதிய உயர்வு கிடைக்கும். சிலருக்குத் தனயோகம் பிறக்கும். கல்வி வளம் மேலோங்கும். திருமணக் காரியம் கைகூடும். மகான்கள் தரிசனம் கிட்டும். மனப் பிரம்மை தீரும். வியாழன்தோறும் ராகவேந்திரரை வழிபட்டு வர நற்பலன் கிட்டும்.

**மகரம்** : மறைமுக எதிர்ப்பு, தொல்லைகள் இருக்கும். உடல்நிலையில் சற்று கவனம் தேவை. யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. நற்பலன் கிட்டும். சுபச் செலவுகள் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். சிலருக்கு வேலையில் இடமாற்றம் உண்டு. சனிக்கிழமைதோறும் சனீஸ்வரருக்கு விளக்கேற்றிப் பூ வைத்து வழிபட்டு வரவும்.

**கும்பம்** : குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். வேலையில் மாற்றம் ஏற்படும். அறிமுகம் இல்லாத துறையில் சம்பாதிக்க முயலுங்கள். மறைமுக எதிர்ப்புகள் இருந்தாலும் பாதிப்பு தராது. குடும்பத்தில் அனுசரணை தேவை. வீடு, மனை வாங்கும் சூழ்நிலை உருவாகும். ராகு, கேதுவை வழிபட்டு வந்தால் நற்பலன் உண்டாகும்.

**மீனம்** : பணி உயர்வு ஏற்படும். எதிர்ப்பு, தொல்லை குறையும். மனைவி வழியில் ஆதாயம் ஏற்படும். சுபகாரியம் கைகூடும். புதிய ஆடை, ஆபரணங்கள் வாங்குவீர்கள். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். கடன் சுமைகள் குறையும். பரிகாரம் தேவை இல்லை. ●

சுபமி

# குற்றவ

சைக்கிள் கடை சந்தானம் இன்று நரி முகத்தில்தான் விழித்திருக்க வேண்டும். இல்லாவிட்டால், முப்பது ரூபாய் மட்டுமே சம்பாதிப்பவனுக்கு, இன்று ஒரே நிமிடத்தில் நூற்றுப் பத்து ரூபாய் லாபம் கிடைத்திருக்குமா?

காலையில் சந்தானத்தின் சின்னஞ்சிறு கடைமுன் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து ஓர் இளவயதுக்காரர் இறங்கினார். முகத்தின் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் அவநம்பிக்கை பளிச்சிட சந்தானத்தை நோக்கி வந்த அவர், ''பிரதர் ஸ்பிரிங் பெல் ஒண்ணு வேணும்... இருக்கா? பழசு கிழசு இருந்தாலும் சரி...'' என்றதும் சந்தானத்துக்கு வியப்பு. 'என்னடா இது? கார்ல வந்திருக்கார் பழசு கேட்கிறாரே, புதுசுக்கென்ன நாட்ல பஞ்சமா?'

''பழசு எதுக்குங்க சார், புதுசே வாங்கிக்குங்க. இருபத்தியஞ்சு ரூபாதானே விலை...'' என்றபடி எழுந்தான்.

''நோ பிரதர்... நான் கேக்கறது சாதாரண பெரிய சைக்கிளுக்கான பெல் இல்ல. பேபி சைக்கிளுக்கான ஸ்பிரிங் பெல். உள்ள இருக்கிறது எதுவும் தெரியாம ரெண்டு பக்கமும் கவர் செஞ்சிருக்குமே - அழுத்துற லிவர்கூட வட்டமா இருக்குமே...''

கிரிங்'னு அழகாய்ச் சத்தம் போடுற அந்தக் காலத்து டபுள் ஸ்பிரிங் பெல்லைச் சொல்றார் இவர்!' நினைத்தபோதே அவனது மனம் பூரிப்பில் துள்ளியது. பதினைந்து வருடங்களுக்கும் மேலாகக் கடையில் தூங்கிக்கொண்டிருக்கும் அந்தப் புத்தம் பழைய மாடல் டபுள் ஸ்பிரிங் பெல்லுக்கு இன்று டிமாண்ட் வந்துவிட்டதே!

''சார், இருக்கு... நீங்க கேக்கறது ஒண்ணே ஒண்ணு இருக்கு...'' என்றபடி மூலையில் கிடந்த அழுக்கேறிய அட்டைப் பெட்டியைத் தூசிதட்டி எடுத்தான். அதில் அதிகபட்ச சில்லறை விலை ரூபாய் பதினைந்து என இருந்தது. வியாபாரிகளுக்கே உரிய சாமர்த்தியத்தில் அதிலிருந்த ஐந்துக்கு முன்னாலிருந்த ஒன்றை நகத்தால் சுரண்டினான். இப்போது அதிகபட்ச சில்லறை விலை 25, 35, 45 என எப்படி வேண்டுமா



சந்தானத்துக்குப் புரிந்தும் புரியாததுமாய் இருந்தது. வந்தவர் மேலும் விளக்கினார். ''அந்தக் காலத்துல நான் சின்னவனா பேபி சைக்கிள் ஓட்டினப்போ என் சைக்கிள்ல அந்த வகை பெல்தான் இருந்துச்சு...''

சந்தானத்துக்குப் புரிந்துவிட்டது. 'மூணு சக்கர சைக்கிளுக்கு மாட்டுற 'கிரிங்

னாலும் நினைத்துக்கொள்ளலாம்!

அட்டைப் பெட்டியைத் திறந்து, ''இதைத்தானேங்க சார் கேக்கறீங்க?'' என்று பெல்லை எடுத்துக் கொடுத்தான்.

வாங்கிய அந்த 'டிப்டாப்' இளவயதுக்காரரின் முகத்தில் ஆயிரம் வாட்ஸ் பிரகாசம். ''ஆமா, ஆமா, இதுதான்! வாட் எ சர்ப்ரைஸ்! பிரதர், நான் டவுன் பூரா



# னைர்வு

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

அலைஞ்சு பாத்துட்டேன்; எங்கேயும் சிக்கலை, உங்ககிட்ட எதுக்கும் கேட்டுப் பாக்கலாம்னுதான் வந்தேன். இருக்குன்னீட்டீங்க. ஐ ஆம் வெரி ஹாப்பி... இதை நான் வாங்கிக்கிடுறேன் பிரதர்...''

'என்ன விலை சொல்லலாம்?' - சந்தானத்தின் மூளை வேக வேகமாக யோசித்தது. யோசிப்பதற்குப் போதுமான நேரத்தை எடுத்துக்கொள்வதற்காக ''இது கொஞ்சம் வெலை ஜாஸ்திங்க சார்...'' என்று தலையைச் சொரிந்தான்.

"சரி பிரதர்... என்ன விலைன்னாலும் நான் வாங்கிக்கறேன்..."

சந்தானத்தின் இடது கண் துடித்தது. அட்டைப் பெட்டியை இப்படியும் அப்படியுமாகப் புரட்டினான். எம்.ஆர்.பி. எவ்வளவு எனப் பார்க்கிறானாம்!

பின் பயந்து பயந்து மெல்லிய குரலில் சொன்னான்: "சார்... இது வந்து, விலை கொஞ்சம் அதிகங்க... வந்து... நூத்தி இருபத்தஞ்சு ரூபாங்க சார்..."

இளவயதுக்காரர் மறுபேச்சுப் பேசாமல் நூற்று இருபத்தைந்து ரூபாவை எடுத்து நீட்டினார்.

அவர் கொஞ்சம் குறைத்துக் கேட்டிருந்தால்கூட சந்தானத்துக்கு ஆறுதலாக இருந்திருக்கும். ஆனால், மனிதர் சொன்னதும் பணத்தை நீட்டிவிட்டாரே?

மனசாட்சி உறுத்த, நடுங்கும் கைகளால் பணத்தை வாங்கிக்கொண்டான். பதினைந்து ரூபாய் பெல்லுக்கு நூற்று இருபத்தைந்து ரூபாய்!

இளவயதுக்காரர் பெல்லை அடித்துப் பார்த்தார். அது இனிமையாய் 'கிரிங்... கிரிங்' என்று சுழன்று சுழன்று ஒலி எழுப்பியது. "இதை என் பையனோட மூணு சக்கர பேபி சைக்கிளுக்காக வாங்கறேன். இப்பல்லாம் பேபி சைக்கிளுக்கு ஹாரன்தானே வைக்கிறாங்க.... 'காருக்குத்தான்ப்பா ஹாரன் இருக்கும். சைக்கிளுக்கு பெல்தான் இருக்கும். என்னோட சைக்கிளுக்கு ஒரு பெல் வாங்கித் தாங்கப்பா'ன்னு தினமும் என்னை நச்சரிக்கிறான். சாதாரண பெல்லையெல்லாம் அவனோட பிஞ்சுக் கையால அழுத்தி அடிக்க முடியுமா? அதான் ஈஸியா இயங்குற இந்த பெல்லைத் தேடி அலைஞ்சேன். ஒரு வழியாய்க் கிடைச்சிருச்சி"

"கொடுங்க சார்.. ஆயில் போட்டுத் தரேன்" என்றான் சந்தானம்.

"ஏன் நல்லாத்தானே இருக்கு?" என்ற அவர் மறுபடியும் பெல்லை அடித்துப் பார்த்தார். வெகு இலகுவாக இயங்கி இதமான ஒலியை இசைத்தது அது.

"கொஞ்சம் கொடுங்க சார்..." என்று அதை வாங்கி, ரிவர்ஸில் சுற்றிச் சுழற்றினான் சந்தானம். 'அதிக ரூபாய் வாங்கிட்டோம். கொஞ்சம் அதை இதை செஞ்சாத்தானே மனசு கேக்கும்?'

உள்ளே இருந்த இரண்டு மெல்லிய ஸ்பிரிங்குகளுக்குச் சிறிது எண்ணெய் விட்டு மீண்டும் மூடினான்; பின் பெல்லை அடித்துப் பார்த்தான். அது முன்போலவே

* சமுத்திரக்கனியுடன் ஜி.கே.



## நாடகம்!

சின்னத்திரையில் வெற்றிக்கொடி நாட்டிவிட்ட அபிநயா கிரியேஷன்ஸ், இப்போது பெரிய திரையிலும் களமிறங்கி விட்டது. "சினிமாவே வேண்டாம்னுதான் இருந்தேன். ஆனா டைரக்டர் சமுத்திரக்கனி சொன்ன கதை என்னை அசைச்சிடுச்சு" என்ற தயாரிப்பாளர் ஜி.கே.விடம் 'அதென்ன நாடகம்னு தலைப்பு?' என்றால், டைரக்டரைக் கைகாட்டினார்.

"இங்க எல்லோருமே ஏதோ ஒரு விஷயத்துக்காக தினமும் நாடகமாடிட்டுதான் இருக்கோம். இந்தச் சூழலை மையப்படுத்திதான் இந்தக் கதையைப் பண்ணியிருக்கேன். புதுமுக நடிகர்களைக் களமிறக்குகிறோம்; கட்டாயம் வெற்றிக் கனியைப் பறிக்கிறோம்" என்றார் சமுத்திரக் கனி. ம்... எட்டாக்கனியாக இல்லாமல் இருந்தால் சரி!

– உமா




-சுஹைல் ரஹ்மான்

இனிமையாய் ஒலித்தது. ''ஓகே!'' என்றபடி பெல்லைக் கொடுத்தான். சற்று வேலை செய்து கொடுத்ததன் காரணமாக, அவனுடைய மன உளைச்சல் இப்போது கொஞ்சம் தணிந்தாற்போல் இருந்தது.

**ம**றுநாள் கடை திறந்ததுமே சந்தானத்தின் கடை வாசலில் அதே கார் வந்து நின்றது. இளவயதுக்காரர் ஒரு பார்சலோடு இறங்கினார்!

''பிரதர், நேத்து ஒரு ஸ்பிரிங் பெல் வாங்கிட்டுப் போனேனே ஞாபகமிருக்கா?'' என்று அவர் ஆரம்பித்ததும் சந்தானத்துக்கு 'திக்'கென்றது. 'நாம விலையில ஏமாத்தினதைக் கண்டுபிடிச்சிட்டாரோ?'

ஆனால், அவர் குறையேதும் சொல்ல வரவில்லை என்று அறிந்ததும்தான் அவனுடைய பதைபதைப்புத் தணிந்தது. இளவயதுக்காரர் உற்சாகமாகச் சொன்னார்: ''பிரதர், போனதுமே அதை என் பையனோட சைக்கிள்ல மாட்டிவிட்டேன். அவன் எப்படி சந்தோஷப்பட்டான் தெரியுமா? இன்னைக்கு அவனோட பிறந்த நாள். டிரஸ், பொம்மை, கேக்ஸ், சாக்லேட்னு நிறைய வாங்கிக் கொடுத்தோம். ஆனா அவனுக்கு இதுலயெல்லாம் கவனம் போகலை. அவன் மனசு பூரா பெல், பெல், பெல்தான்! விடிஞ்சதிலேர்ந்து சைக்கிளை விட்டு இறங்காம, பெல்லை அடிச்சுக்கிட்டே இருக்கான்! அவன் இவ்வளவு சந்தோஷமா இருந்து நான் பார்த்ததேயில்லை. எங்களுக்கு ரொம்ப ரொம்பச் சந்தோஷமா இருக்கு. இதுக்கெல்லாம் காரணம் நீங்கதானே? உங்களை மறுபடியும் பார்த்து ஒரு தாங்ஸ் சொல்லலேன்னா, என்னோட மனசாட்சி என்னைக் கொன்னே போட்டுரும்! அதான் மறுபடி வந்தேன். ரொம்ப நன்றி பிரதர்! பிடியுங்க இதை. வேற ஒண்ணுமில்ல, சும்மா பிறந்தநாள் கேக்தான்.''

சந்தானத்தின் மனசாட்சி முழு வலிமையுடன் இப்போது உறுத்தியது. நடுங்கும் கரங்களுடன் அவர் அளித்த கேக் பார்சலை வாங்கிக்கொண்டான். பின் சட்டைப் பையிலிருந்து நூற்றுப் பத்து ரூபாவை எடுத்து நீட்டியபடி சொன்னான்: ''சார், நீங்க போனதும் நான் பிரைஸ் லிஸ்ட்டைச் சரி பார்த்தேன். அதில் அந்த பெல் பதினைஞ்சு ரூபான்னு போட்டிருந்துச்சு. அட்டைப் பெட்டியில எம்.ஆர்.பி. பாதி அழிஞ்சு அஞ்சு மட்டும் தெரிஞ்சதால, நான் தப்பா நூத்தி இருபத்தஞ்சின்னு நெனைச்சுட்டேன். ஸாரிங்க சார்... இந்தாங்க நான் கூடுதலா வாங்கின நூத்திப்பத்து ரூபா...''

''மை காட்!'' என்று வியந்த இளவயதுக்காரர், ''இந்தக் காலத்தில் இப்படி ஒருத்தர் இருக்கீங்களே பிரதர், ஐ ஆம் ரியலி வெரி வெரி ஹாப்பி. கூடுதலா வாங்கினதைத் திருப்பித் தர்றீங்களே, இட் இஸ் கிரேட்! உங்களை மாதிரி நேர்மையானவங்களை என்கரேஜ் பண்ணணும். உங்க ரூபாவை பாக்கெட்ல வெச்சுட்டு, இதைப் பிடியுங்க பிரதர்!'' என்றபடி தன் பர்ஸிலிருந்து ஒரு நூறு ரூபா நோட்டை எடுத்து, சந்தானத்தின் கையில் திணித்துவிட்டு வெகு திருப்தியுடன் நடந்தார்.

கையில் இருநூற்றுப் பத்து ரூபாய் கனக்க, சந்தானம் மறுபடியும் குற்ற உணர்வில் குறுகினான்! ●

## ஹலோ வாசகர்களே!

**வ**ணக்கம். கடந்த பதினெட்டு வாரங்களாக இந்தப் பகுதி மூலம் உங்களின் கருத்துகள், ஆலோசனைகள், எதிர்பார்ப்புகள் அனைத்தையும் அறிந்தோம். 'கல்கி' மீது தாங்கள் கொண்டுள்ள அன்பை நன்றாகப் புரிந்துகொள்ள முடிந்தது. கல்கியைத் தாங்கள் வெறும் பொழுதுபோக்கு அம்சமாக மட்டும் பார்க்கவில்லை, மற்ற பத்திரிகைகளுடன் ஒப்பிடுவதையும் விரும்பவில்லை என்பது தெளிவானது. உங்களின் ஆலோசனைகள் எங்கள் இதயங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. தங்களின் எதிர்பார்ப்புகளை ஒவ்வொன்றாக நிறைவேற்றுவோம். முதல் கட்டமாக தீபாவளி இதழில் சில இன்ப அதிர்ச்சிகளை அளிக்கிறோம். மேலும் பல பகுதிகள் அடுத்தடுத்து தொடங்கப்படும். இந்த இதழுடன் 'தித்திக்கும் திங்கள்' இனிப்புடன் நிறைவு பெறுகிறது. தங்களின் கருத்துகளுக்கு நன்றி! நன்றி!! நன்றி!!

**- கல்கி டீம்**

"**க**ல்கியில் வெளியாகும் கார்ட்டூன்களை மிகவும் ரசிப்பேன். சமுதாய அவலங்களை 'சைலன்ட்டாக' மக்கள் மனத்தில் பதிய வைக்கிறீர்கள். சிறுகதைகளை அதிகம் எதிர்பார்க்கிறேன். பக்கங்களை அதிகரித்தால் இன்னும் நிறைவாக இருக்கும். மக்களின் குரலாக ஓங்கி ஒலிக்கும் தலையங்கங்கள் சிறப்பு" என்று சொல்கிறார் **த.முருங்கப்பட்டி எஸ்.கே.வாலி.**

## இறுதி - முதன்மை!

"**அ**மரர் கல்கி ஆசிரியராக இருந்த கல்கி, பின்னர் ராஜாஜி அவர்களின் கருத்துப் பெட்டகத்துடன் வந்த கல்கி, பல்வேறு மாற்றங்களுடன் வரும் இன்றைய கல்கி... எனத் தொடர்ந்து வாசித்து வருகிறேன். சிரிக்க... கிரேஸி பதில்கள், சிந்திக்க... தராசு பதில்கள்! ஆசிரியர் பக்கம் ஒவ்வொரு வாரமும் இறுதிப் பக்கத்தில் வெளியானாலும் இதழுக்கே முதன்மையாகி விடுகிறது" என்கிறார் **த.முருங்கப்பட்டி எஸ்.ஆர்.மணியன்.**

* கோபாலகிருஷ்ணன்

* வாலி

## குடும்ப நண்பன்!

"**எ**னக்கு எழுபது

* ராமச்சந்திரன்...

# ஓங்கி ஒலிக்கும்



வயது. நினைவு தெரிந்த நாளிலிருந்தே கல்கியுடன் எனக்குப் பரிட்சயம். அலை ஓசை, சிவகாமியின் சபதம் போன்ற தொடர்களை 'சந்திரா' அவர்களின் ஓவியங்களுடன் படித்த ஞாபகத்தை இப்போதும் மறக்க முடியவில்லை. அநேகமாக கல்கியில் வெளியான அத்தனை போட்டிகளிலும் கலந்துகொண்டு பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளேன். கல்கியைப் பற்றிச் சுருக்கமாகச் செல்வதென்றால், என் குடும்ப நண்பன்'' என்கிறார் **கொரட்டூர் கோபாலகிருஷ்ணன்.**

### நெஞ்சுக்கு உரம்!

''மகாபெரியவரின் 'அருள்வாக்கு' தவறாமல் படிப்போம். நெஞ்சுக்கு உரம் சேர்க்கும் வார்த்தைகள் அவற்றில் மிளிரும். 'வாரம் ஒரு பாசுரம்' ஒவ்வொரு வாரமும் சிறப்பாக இருந்தன. எங்களைப் போன்றோர்க்கு இதுபோன்ற ஆன்மிகப் பகுதிகள் வரம். அதேசமயம் இளைஞர்களுக்கான துள்ளல் பகுதிகளையும் கல்கியில் காண முடிகிறது. மொத்தத்தில் எல்லா தரப்பிலும் சுவை குன்றாத பத்திரிகை'' என்கிறார்கள் **பாரதி இராமச்சந்திரனும் அவரது மனைவியும் (சென்னை)**

### குட்டு - ஷொட்டு!

''அரசியல்வாதிகளின் தவறுகளைக் க(கு)ட்டிக் காட்டும் அதே சமயத்தில், ஒரு நல்ல விஷயம் செய்ததும் தயங்காமல் 'ஷொட்டு'கிறீர்கள். சமயத்தில் சம்பந்தப்பட்ட அரசியல்வாதி தங்கள் மீது வார்த்தைகளைக் கொட்டினாலும் அதனை மறந்து நல்ல விஷயத்தில் பாராட்டுகிறீர்கள். இதை பல சமயங்களில் கண்டுள்ளேன். ஜாதீயம், மதம் ஆகியவற்றின் தவறுகளைச் சுட்டிக் காட்டும் தைரியமான தலையங்கங்களுக்கு சபாஷ் போடலாம். கல்கியை கையில் எடுத்தாலே மனம் புத்துணர்ச்சி பெறுகிறது'' என்கிறார் **மேல கிருஷ்ணன்புதூர் பிரபாலிங்கேஷ்.**

* ... தம்பதி

* பிரபாலிங்கேஷ்

* மணியன்

# குரல்!

# ஆல் ஸ்டார்ஸ்!

கர்நாடகத்தில் ஜனாதிபதி ஆட்சி அமலுக்கு வந்தது பற்றி தமிழ்நாட்டு அரசியல் தலைவர்கள், நமது தினப் புரளி பத்திரிகைக்கு அளித்த பேட்டிகள்:

கற்பனை: **குசும்புராஜ்**











**கலைஞர் கருணாநிதி (தி.மு.க.):**
ஏதோ இருபதுக்கு இருபது ஒப்பந்தமாம். சொன்னபடி வாக்கு மாறாமல் ஆட்சியை விட்டுக் கொடுக்க வேண்டுமாம். இரண்டு நாட்கள் பதவியில் அமர்ந்தாலே, மூன்றாவது நாள் எழுந்துகொள்ள மனசு வராது. அப்படியிருக்க, இருபது மாதங்களாக இருந்தவரை வீட்டுக்குப் போகச் சொல்வது அநியாயம். சக அரசியல்வாதிகளுக்குள்ளேயே இப்படி கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டுமென எதிர்பார்ப்பது முறையல்ல. இதைப் பின்பற்றி மக்களும் அவர்களுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றச் சொல்வார்கள். ஒரு கற்பனைக் கதையுண்டு. அதன் பெயர் மறந்துவிட்டது. அதில், அண்ணன் கானகம் சென்றுவிட, தம்பி காத்திருந்து, அவர் திரும்பி வந்ததும் ஆட்சியை ஒப்படைத்தானாம். இதெல்லாம் கதைக்கு சரி. நிஜத்தில் எதிர்பார்ப்பது சிறுபிள்ளைத்தனமானது!

**ஜெ.ஜெயலலிதா (அ.தி.மு.க):**
இதெல்லாம் இந்த மாநிலத்திலுள்ள ஒரு மைனாரிட்டி

# கர்நாடகாவில் காமராஜர் ஆட்சி!

அரசும் மத்திய அரசும் சேர்ந்து செய்த சதி. கருணாநிதி டி.வி.யில் இந்தச் செய்தியை மீண்டும் மீண்டும் ஒளிபரப்பி, பெரிய விஷயமாக்கி விட்டனர். இதனால் கர்நாடகத்திலுள்ள தமிழர்களுக்குப் பாதுகாப்பு அச்சம் ஏற்பட்டுள்ளது. இதனைக் கண்டித்து இந்த மைனாரிட்டி அரசை 'டிஸ்மிஸ்' செய்து, இங்கும் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டுவர வேண்டும். மேலும் கருணாநிதி டி.வி.க்கும் தடை விதிக்க வேண்டும் அல்லது அந்த டி.வி.யில் வரும் 'மானாட.... மயிலாட....' நிகழ்ச்சியை மட்டுமாவது நிறுத்த வேண்டும். கடந்த வாரம் அந்த நிகழ்ச்சியில் நடிகை நமீதா ஆடியதைப் பார்த்து, அப்பாவித் தமிழர்கள் அதிர்ச்சியடைந்துள்ளனர். நான்கு பேரின் உடல்நிலை மோசமாக உள்ளது.

**டாக்டர் ராமதாஸ் (பா.ம.க.):**

இது நியாயமானதே! கூட்டணி ஆட்சி நடக்கையில், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தே ஆட்சி செய்ய வேண்டும். இல்லையெனில் 'டிஸ்மிஸ்' செய்துவிட வேண்டும். நான் சொன்னது கர்நாடகத்தைப் பற்றி மட்டுமே. இங்கும் அதுபோல் நடக்க வேண்டுமென எனது கட்சியினரோ, மக்களோ எதிர்பார்த்தாலும் நான் எதிர்பார்க்கவில்லை. கலைஞர் ஆட்சி தொடரும். இருபது மாதங்கள்கூட வேண்டாம், இரண்டு மாதங்கள் ஆளலாமே என்று எதிர்பார்ப்பது நியாயம்தான். ஆனாலும் கலைஞர் ஆட்சி தொடரும். எங்களால் அந்த இரண்டு மாதங்கள் சிறப்பாகச் செயல்பட முடியும். இருந்தாலும் கலைஞர் ஆட்சி தொடரும். மற்றவர்களைப்போல் அடம் பிடிக்காமல் சரியாக இரண்டு மாதம் முடிந்ததும் விலகி விடுவோம். என்றாலும் கலைஞர் ஆட்சி தொடரும். இது குறித்து முதல்வரிடம் பேசுவோம். அப்போதும் கலைஞர் ஆட்சி தொடரும்!

**விஜய டி.ராஜேந்தர் (ல.தி.மு.க.):**

இருபது இருபதுன்னு போட்டாங்க ஒப்பந்தம், அது காலம் செய்த நிர்ப்பந்தம்! மீறினாரு நம்ம குமாரசாமி, ஆட்சி போச்சு ஐயோ சாமி! வந்தது ஜனாதிபதி ஆட்சி, அதனால உள்ளதும் போச்சி! அளவா இருக்கணும் ஆசை, இல்லைன்னா அது ஆயிடும் நீய்ஞ்ச தோசை! நீயும் சாப்பிட முடியாது, அடுத்தவனும் தொட முடியாது! ஏய் டண்டணக்கா... டண்டணக்கா!

**சரத்குமார் (ச.ம.க.):**

நான் புதுக் கட்சியை ஆரம்பிச்ச நேரம், கர்நாடக அரசியல்ல மாற்றம் ஏற்பட்டிருக்கு. மக்கள் அதிருப்தியில இருக்காங்க. நான் நடிச்ச 'நாட்டாமை', 'சூர்ய வம்சம்' படங்கள் அங்கே 'ரீமேக்' ஆகி வெற்றிகரமா ஓடி இருக்கு. அதனால மக்கள் ஒரு 'ரீமேக்' ஆட்சியை எதிர்பார்க்கறாங்க. அதுதான் வெற்றிகரமா நடக்கும்னு நினைக்கறாங்க. அதனால கன்னட மக்களின் ஆதரவோடு கர்நாடகத்தில் காமராஜர் ஆட்சியை அமைப்போம். காவிரியைத் திறந்துவிட்டுத் தமிழ்நாட்டையும் பிடிப்போம்!



# பசுபதி மே/பா ராசக்காபாளையம்

'அம்மா கொடுத்த உயிர் அம்மாவுக்கே சமர்ப்பணம்'னு தாய்க்கும் மகனுக்கும் இடையில நடக்கிற பாசப் போராட்டத்தை உணர்ச்சிக் குவியலா படைச்சிருக்காங்க.

ராசக்காபாளையம் பசுபதின்னு காட்சிக்குக் காட்சி சொல்லி படத்தோட டைட்டில மனசுல பதிய வெக்கிற ரஞ்சித், போலீஸா மாறும்போது வெகுளித்தனமாவும், ரவுடிகளைப் பிரிச்சு மேயும்போது டெரராவும் நடிப்பை வெளிப்படுத்தி பட்டையைக் கிளப்பியிருக்கார்.

சிந்து துலானி அப்பப்ப வந்துபோற வழக்கமான நாயகி. ஊறுகாய் மாதிரி பயன்பட்டிருக்காங்க. நல்லவேளை காதல் கீதல்னு கிளம்பாதது ஆறுதல் தருது.

படத்தோட மெகா பலம் விவேக். கொஞ்சம் தொய்வா இருந்த இவரோட மார்க்கெட் சிவாஜிக்குப் பிறகு டாப் கியர்ல எகிறிட்டிருக்கு. அதுக்காக சிவாஜி மாதிரி இதுலயும் மிமிக்ரி பண்றது நல்லால்ல. போலீஸா வந்து போடுற தகிடுதத்தங்கள் சபாஷ் ரகம்.

ஆடியன்ஸோட ஒட்டுமொத்த அனுதாப அப்ளாஸையும் அம்மாவா நடிச்ச ராணி அள்ளிக்கிட்டுப் போறாங்க. 'கஞ்சா கருப்பு' காமெடி எடுபடல. பின்பாதில நக்சலைட், தீவிரவாதம்னு திடுதிப்புன்னு படம் ரூட் மாறிப் போறது எடுபடல.

காசை முழுங்கினா காசு மரம் முளைக்கும்னு சொன்னதைக் கேட்டுட்டு, 'அப்ப பணத்தை முழுங்கினா பண மரம் முளைக்கும். அந்த மரத்திலேர்ந்து பணத்தைப் பறிச்சு அம்மாவுக்குத் தரலாம்'னு சின்ன வயசு ரஞ்சித் நினைக்கும்போது நம்மை அறியாம கண்ணு கலங்கிடுது.

'ஒரு துளியில்' பாடல்ல மட்டும் தேவா தேறுறார். சண்டைக் காட்சிகள்ல ரசிகர்களை சீட்டோட நுனிக்குக் கொண்டு வர்ற தளபதி தினேஷுக்கு சல்யூட். ஒளிப்பதிவுக்குப் பெருசா வேலை இல்ல. டைரக்ஷன் செல்வபாரதி. அம்மா சென்ட்டிமென்ட்ல காட்டின அக்கறையை திரைக்கதையிலயும் காட்டிருக்கலாம். ஆனா, அதே நேரத்துல தாய்க்குலத்தோட மனசைத் தட்டினதுல ஜெயிச்சிடுறார்.

– ரேவதி

# வீரமும் ஈரமும்

**கா**தல் பிரச்னையால ரெண்டா பிரியுற குடும்பம். நீயா, நானாங்கிற ரேஞ்சுக்கு வீச்சரிவாளை எடுத்துப் போட்டுத் தள்ளி கொலை வெறியோடு திரியுறாங்க. க்ளைமாக்ஸ்ல ரெண்டு (குடும்பமும்) குரூப்பும் ஒண்ணு கூடினாங்களாங்கிறதுதான் கதை.

ஹீரோ சரவணன், ஈர நெஞ்சத்தோடு நடிச்சு நெஞ்சுல நிக்குறாரு. யாரை ஹீரோயின்னு சொல்றது? புதுமுக நாயகிகள் சோனிகா, தானியா ரெண்டு பேரும் படத்தோட மசாலா பாப்கார்ன். டீச்சருக்கும் ரவுடி சஞ்சய்ராமுக்கும் ஏற்படுற காதல், மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் போடுற முடிச்சா இருந்தாலும் சுவாரஸ்யமாத்தான் இருக்கு. குறிப்பா ரவுடி பள்ளிக்கூடத்து வாசல்ல 'பூ'வோட நின்னு 'ஐ லவ் யூ' சொல்லத் தொடங்குற காட்சி அழகிய பொக்கே.

யுகேந்திரனின் பின்னணி இசை மிரட்டல். ஆனா பாடல்கள்தான் எதுவும் தேறல. வியோ.டியின் ஒளிப்பதிவு ஓகே.

தயாரிப்பு, பாடல்களில் ஆரம்பிச்சு இயக்கம் வரை சஞ்சய்ராம். அதனால் எல்லாப் பலனும் அவருக்கே. திரைக்கதையில் வீரமும் ஈரமும் ஓகே. ஆனால் இல்லாதது காரமும் சாரமும்.

**- இனியா**





**தே**வதாசிகளுக்குன்னு ஒரு முகம் இருக்க, அதை மாத்தி அவங்களையும் புரட்சிப் பெண்ணா வாழ்ந்து காட்ட முடியும்னு சொல்லியிருக்கற படம்தான் சிருங்காரம். தேவதாசியா வர்ற அதிதி ராவ் அற்புதமான தேர்வு. பாத்திரத்தை உணர்ந்து நடிச்சு, மிக இயல்பாகப் பண்ணியிருக்காங்க. 'நான் தேவதாசிதான்; ஆனா தாசி இல்லை'ன்னு பொங்கி எழும் போது பண்பட்ட நடிப்பு வெளிப்படுது. நடனத்திலும் மிளிர்றாங்க. மனோஜ் கே.ஜெயின் மாறுபட்ட கேரக்டர்ல வாழ்ந்திருக்கார். வில்லனாவே பார்த்த நமக்கு, அவரோட தேர்ந்த நடிப்பைப் பார்க்கும்போது சிலிர்க்குது.

லால்குடி ஜெயராமனோட இசை மிகப்பெரிய கிஃப்ட். படத்தோடு ஒன்ற வச்சு லயிக்கத் தூண்டுது. மது அம்பாட்டின் ஒளிப்பதிவுக்கு திருஷ்டி சுத்திப் போடணும். டைரக்‌ஷன் சாரதா ராமநாதன். தாசிகளை உயர்வா காட்டி, அந்தக் குலத்துக்கே பெருமை தேடித் தந்திருக்கார். தெளிவான, நீரோட்டம் போன்ற காட்சியமைப்புகள் இயல்பான சினிமாவை அடையாளம் காட்டுது.

**- சித்ரா**

# சிருங்காரம்

எத்தனையோ விதமான தாண்டவங்கள் உண்டு. காளிகா தாண்டவம் என்று ஒன்று; காளி தாண்டவம் என்று ஒன்று உண்டு. காளிகா தாண்டவம் வேறு, காளி தாண்டவம் வேறு. சிவபெருமான் ஆடிய தாண்டவங்கள் எத்தனை என்று பார்த்தால், ஏழு வகையான தாண்டவங்கள் பிரதானம். அந்த ஏழு வகையான தாண்டவங்கள் அல்லாமல் வேறு சில தாண்டவங்களும் உண்டு... அவை அல்லாமல் 108 கரணங்களும் உண்டு.

முக்கியமான சில த்தாண்டவங்கள் என்னென்ன காரணத்துக்காக ஆடப்பட்டன என்பதற்குக் கணக்கு உண்டு. காளிகா தாண்டவம் என்பது என்னவென்றால், சிருஷ்டி காலத்தில் ஆடப்பட்டது.


ஊர்த்துவ தாண்டவம், தென்காசி

ஸ்திதி காலத்தில், காப்பாற்றுவதற்காக ஆடிய தாண்டவமும் உண்டு.

காளி தாண்டவம் என்பது திருவாலங்காட்டில் ஆடிய தாண்டவம். காளியோடு போட்டி போட்டுக்கொண்டு ஆடிய தாண்டவம்.

ஊர்த்துவ தாண்டவம் என்பது காளி தாண்டவத்துக்குள்ளே அடங்கிவிடாது. அதிலிருந்து கொஞ்சம் வித்தியாசப்படுகிறது. ஊர்த்துவம் என்பது காலை மேலே தூக்கி ஆடிய நடனம்; அவ்வளவுதான். அதன் பிறகு அதனோடு நிறைய கதைகளெல்லாம் சேர்ந்துபோய்விட்டன! இதற்குக் காரணம் என்னவென்று பார்த்தோமானால், லலாட திலகம் என்று ஒன்று 108 கரணங்களில் அமைந்துள்ளது. இந்த லலாட திலகமும் ஊர்த்துவ தாண்டவமும் கிட்டத்தட்ட ஒரே நிலையானவை.

## திருவாலங்காடு

திருவாலங்காட்டிலும் தென்காசியிலும் ஊர்த்துவ தாண்டவ சிற்பங்களைப் பார்க்கலாம். சிதம்பரத்தில் இருக்கும் ஊர்த்துவ தாண்டவத்துக்கும் திருவாலங்

## சுதா சேஷய்யன்

# தாண்டவத் தத்துவம்

காட்டில் இருக்கும் ஊர்துவ தாண்டவத்துக்கும் வித்தியாசம் இருக்கிறது.

திருவாலங்காட்டில் ஈசுவரன் இடது காலைத் தூக்கி ஆடிக்கொண்டிருப்பார். சிதம்பரத்திலும் தென்காசியிலும் வலது காலை ஊர்துவமாக வைத்துக்கொண்டு ஆடுவார்.

முறைப்படி பார்த்தோமானால், ஊர்துவ தாண்டவம் என்பது, வலது காலை மேலே தூக்கி நேரே செங்குத்தாக உயர்த்துவது. சிற்பத்தில் பார்த்தால் தெரியும் இது - ரொம்ப அழகு!

ஆனால், திருவாலங்காட்டு ஊர்துவ தாண்டவம் கொஞ்சம் வித்தியாசமாக இருக்கும். பஞ்சலோகத் திருமேனி; இடது கால் உலகளந்த பெருமாள் திரிவிக்கிரமனைப் போல் தூக்கியிருக்கும் - கொஞ்சம் சாய்ந்த நிலையில் திரிவிக்கிரம பெருமாள் தூக்கியிருப்பாரே, கிட்டத்தட்ட அதே மாதிரி இருக்கும் திருவாலங்காட்டு ஊர்துவ தாண்டவம். திருவாலங்காட்டில் மட்டும்தான் இப்படி இடது காலைத் தூக்கி ஆடுவதைப் பார்க்கலாம் - காளியோடு போட்டி போட்டுக்கொண்டு ஆடியது. காளியினால் ஆட முடியவில்லை; அதனால் காளி வெட்கித் தலை குனிந்தாள் என்பது திருவாலங்காட்டுப் புராணம்.

லலாட திலகத்தோடு இந்தத் தாண்டவத்தைச் சமமாக நோக்குவது வழக்கம். 108 கரணங்களுள் லலாட திலகம் என்பது என்னவென்றால், (லலாடம் என்பது நெற்றி) காலை மேலே தூக்கிக்கொண்டு போய், நெற்றியில் திலகத்தை இட்டுக் கொள்ளக்கூடிய கரணத்துக்கு லலாட திலகம் என்று பெயர். லலாட திலகத்தையும் ஊர்துவ தாண்டவத்தையும் இணைத்த போதுதான் பிற்காலத்தில் கதை வந்தது - திருவாலங்காட்டுக் கதை- காளியோடு போட்டி போட்டுக்கொண்டு ஆடுகிற போது காதிலிருந்த குழையைக் காலாலேயே கழற்றி மாட்டினார் என்கிற கதை. நெற்றி வரைக்கும் போகாமல் காது அளவில் கதையும் தாண்டவமும் நின்று காட்சி தருகின்றன!

இதுதான் காளி தாண்டவம் என்று பெயர் பெற்றது. இது அனுக்ரஹத்துக்கான தாண்டவம் - ஐந்து தொழில்களுள் அனுக்ரஹத்துக்கானது.

### ஆனந்தத் தாண்டவம்

**சா**தாரணமாக, நாம் திருக்கோயில்களில் பார்க்கக்கூடிய நடராஜ திருமேனிகள் ஆனந்தத் தாண்டவம். ஐந்து தொழில்களும் இணைந்து சேர்ந்து அமைந்த தோற்றம் ஆனந்தத் தாண்டவ தோற்றம்.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கிற ஐந்து கிருத்தியங்

களையும் உள்ளடக்கியது ஆனந்தத் தாண்டவம். இந்த ஐந்து தொழில்களுக்கான அங்கங்களையும் அதிலே பார்க்கலாம். அது தவிர ஐவகைத் தாண்டவங்களும் உண்டு - ஐந்து தொழில்களை யும் குறிப்பாக உணர்த்தும் ஐவகைத் தாண்டவங்கள்.

அவற்றுள் ஒன்றுதான் ஊர்துவ தாண்டவம். அது அருளலுக்கான தாண்டவம் ராமநாதபுரத்தில் திருப்பத்தூர் என்று ஓர் இடம் - அங்கே ஒரு காளிகா தாண்டவம் உண்டு. அது சிருஷ்டி காலத் துத் தாண்டவம்.

ஸ்திதி அல்லது காத்தலுக் கானத் தாண்டவம் உண்டு. இந்த ஸ்திதி காலத்துக்கானத் தாண்டவம் இரண்டு வகை யாகப் பிரியும். அந்த வித்தி யாசத்தை எங்கே பார்க்கலாம் என்றால், நடராஜர் காலுக்குக் கீழே முயலகன் கிடப்பானே, அவனிடத்தில் பார்க்கலாம்.



காளிகா தாண்டவம், திருவாலங்காடு

சிருஷ்டி காலத்தில் ஆடிய தாண்டவம் என்றால், முயலகன் தன் தலையைப் பெரி தாகத் தூக்கிக் கொண்டிருப்பான். ஏனென் றால் முயலகன் என்பவன் அகம்பாவத்தின் குறியீடு. சிருஷ்டி காலத்தில் முயலகன், ''ஆஹா! நான் பிறந்துவிட்டேனே!'' என் கிற பாவத்தில் தலையைத் தூக்கிக் கொண் டிருப்பான். சில சமயங்களில் பார்த்தால் முயலகனின் தலை பக்கவாட்டிலே இருக் கும்; வேறு சில இடங்களில் அதே முயல கனின் தலை முன்னால் நீட்டிக்கொண் டிருக்கும். இப்படி முன்னதாக நீட்டிக் கொண்டிருப்பதுதான் சிருஷ்டி காலத்து முயலகன்.

அப்புறம் ஸ்திதி காலத்து முயலகன் பார்த்தால், முழுக்க முழுக்க அசைவே இல்லாமல், அப்படியே கிடக்கும். இதற்கு என்ன அர்த்தம் என்றால், முயலகன் இறந்துபோனான் (முயலகன் உடலின் குறியீடு). உடல் போய்விட்டது. உடலி லிருக்கக்கூடிய ஜீவனை, ஆத்மாவை, நட ராஜப் பெருமான் அப்படியே தமது காலால் தூக்கிக்கொள்கிறாராம். அப்படித் தூக்கி, அதை எங்கே நிறுத்துகிறார் என்றால், ஆடுகிறதே அவருடைய சிகை, அதிலே கொண்டுபோய் நிறுத்துகிறார்!

நடராஜர் சிலைகளில் அவருடைய ஆடலின் அசைவை அவருடைய விரித்த சடையின் அமைப்பு அழகாக உணர்த்திக் கொண்டிருக்கும். செஞ்சடைக் கற்றை, அப்படியே எல்லா திசைகளிலும் சிதறி ஆடிக்கொண்டிருக்கும்...!

திருமூலர் பாடுகிறபோது சொல்கிறார்: 'நுண்சிகை ஞானமாம்' என்று. அவ ருடைய சிகை எதைக் காட்டுகிறது என் றால், ஞானத்தைக் காட்டுகிறது.

நடராஜர் என்ன பண்ணுகிறாராம், இந்த ஜீவனை, பந்தத்திலிருந்து அப்படியே வெளியேற்றி, தூக்கி, தன்னுடைய காலி னால், குஞ்சிதபாதத்தில் (அருளலின்

சின்னம்தான் குஞ்சிதபாதம்) தூக்கி ஞானத்தின் அருகே கொண்டுபோய் வைத்து விடுகிறாராம். ஞானத்தின் அனுபவத்தை அடைகிறபோது, ஜீவன் பரமாத்மாவோடு சேர்ந்துவிடும்.

### தாம் உளவாக்கலும்

மஹாபிரளய காலத்தில் நடராஜப் பெருமான் மஹாதாண்டவம் ஆடுகிறார். ஊழிப் பிரளய காலம் அது. ஒன்றுமே உலகில் கிடையாது; எல்லாமே போய் அந்த சர்வேசுவரனிடத்திலே ஒடுங்கிவிட்டன.

ஸநாதன தர்மம் மட்டும்தான் இப்படி ஒரு கருத்தைச் சொல்கிறது. வேறு எங்கேயும் இதைப் பார்க்க முடியாது. அற்புதமான ஒரு சிந்தனை இது.

சிருஷ்டி என்கிறோம், ஸ்திதி என்று சொல்கிறோம். ஸம்ஹாரம் என்றுகூட சொல்வதில்லை. லயம் என்று குறிப்பிடுகிறோம்.

லயம் என்றால் என்ன...? ரொம்ப லய




சுத்தமாக இருந்தது என்றால், இணைப்பு சரியாக இருந்தது, தாளம் பிசகாமல், காலப் பிரமாணம் மாறாமல் இருந்தது என்று அர்த்தம்.

தோன்றுகிற பொருள் எதிலிருந்து தோன்றுகிறது? கம்பருடைய வார்த்தைக்கே மீண்டும் வருவோம்: 'தாம் உளவாக்கலும்' என்றார்.

உலகத்தைப் படைக்கிற பரமேசுவரன், பரமேசுவரி எங்கேயிருந்து படைக்கிறார்கள் என்றால், அந்த பிரம்மத்தினடத்திலேயிருந்துதான் படைக்கிறார்கள். இருப்பது அத்தனையும் பிரம்மத்தினடத்திலேயிருந்துதான் வந்தன. - இது சநாதன தர்மத்தில் மட்டுமே இருக்கக்கூடிய அரும் கருத்து.

இப்படி யோசித்துப் பார்ப்போமே... களிமண்ணால் செய்த பானை இருக்கிறது. பானையைச் செய்தவர் யார்...? குயவர் செய்தார் என்று வைத்துக்கொள்வோம். பானையைச் செய்தவர் படைப்பாளி. பானை அவரது படைப்பு. இப்போது இந்தப் படைப்புக்கு உள்ளே படைப்பாளி இருக்கிறாரா என்றால், இல்லை. குயவரிடமிருந்து பானையைத் தனியே பிரித்துக் கொண்டு போய்விடலாம். 'பானை எனக்கு வேண்டும்' என்று காசு கொடுத்து வாங்கிப் போய்விடலாம்.

ஆனால், சநாதன தர்மம் இதிலிருந்து வேறுபடுகிறது. இந்தப் படைப்பும் சிருஷ்டியும் எங்கிருந்தோ வரவில்லை. சிருஷ்டிகர்த்தா, தனக்குள்ளிருந்தே இதனை சிருஷ்டித்தார்! பரமாத்மா, தன்னுடைய ஒரு சிறிய கூறினை, கலையை, பிம்பத்தை - சித் என்கிற ஸ்வரூபமாக அந்த ஜீவனுக்குள்ளே விடுகிறார்.

அவ்வளவு பெரிய பரமாத்மா, அவரிடமிருந்து மிகச்சிறிய ஒரு துளி - அந்தத் துளிதான் ஜீவாத்மாவுக்குள்ளே சித் என்கிற வடிவத்தில் இருக்கிறது என்கிறபோது, அந்த சித்தும் பரமாத்மாவைப் போன்றே தெய்வாம்சம் அடைகிறது.

இதையே சுவாமி விவேகானந்தர் எப்படிச் சொன்னார் என்பதை அடுத்த வாரம் பார்ப்போம்.

**(வளரும்)**

# ஆயிரம் ஆண்டுகள்... அழியாத பூச்செடிகள்!



✱ அடினியம் ஒபேஸம் செடிகளுடன் சுந்தரம் தம்பதி...

கரூர் மாவட்டம், கிழக்கு எல்லையின் கடைக்கோடியில் இருக்கிறது நச்சலூர் கிராமம். நவீன வசதிகள் அவ்வளவாக எட்டிப் பார்த்திராத இந்தக் கிராமத்துக்கு உலக நாடுகள் பலவற்றிலுமிருந்து நாளொன்றுக்குச் சராசரியாக இருநூறு இ-மெயில் விசாரணைகள் வருகின்றன. அங்கு வசித்து வரும் என்.ஆர்.சுந்தரம் - பத்மினி சுந்தரம் தம்பதிக்கு வரும் அத்தனை இமெயிலும் அவர்களிடம் ஆலோசனை கேட்டு வருபவை. 'அடினியம் ஒபேஸம்' என்னும் அலங்கார மலர் விவசாயம் குறித்துத்தான் இப்படி ஏகப்பட்ட விசாரணைகள்.

அடினியம் ஒபேஸம் என்பது எழில் மிளிரும் அலங்காரப் பூச்செடி. இதில் பூக்கள் மட்டும்தான் அழகு என்றில்லை. அதன் இலைகள், காம்புகள், தண்டுகள் மற்றும் செடியின் அடிப்பகுதி என ஒவ்வொன்றிலும் வெவ்வேறுவிதமான அழகு. இந்தப் பூச்செடியின் தாய் மண் ஆப்பிரிக்கா மற்றும் அரேபிய தேசங்கள் ஆகும்.

தம்முடைய இரண்டு ஏக்கர் தோட்டத்தில் விதம்விதமான அடினியம் பூச்செடிகளை உற்பத்தி செய்து வரும் என்.ஆர்.சுந்தரம், இது பற்றிக் கூறுகையில், ''நான்கு ஆண்டுகளுக்கு முன்பாக தாய்லாந்து நாட்டின் பாங்காக் நகரில் நடந்த மலர்க் கண்காட்சிக்குச் சென்றிருந்தேன். அடினியம் பூச்செடிகளுக்காக மட்டுமே பிரத்யேகமாக நடத்தப்பட்ட கண்காட்சி அது. அங்கிருந்து ஒன்பது வகை அடினியம் பூச்செடிகளை பதியனிட்டு வாங்கி வந்தேன். ஏற்கெனவே என்னுடைய தோட்டத்தில் வளர்த்து வரும் அடினியம் ஒபேஸம் பூச்செடிகளுடன் ஒட்டுக்கட்டி இனப்பெருக்கும் செய்து, இதுவரையில் ஐம்பத்திமூன்று புது வகை அடினியம் பூச்செடிகளை உருவாக்கியுள்ளேன். இங்கு உற்பத்தி செய்யப்படும்



பூச்செடிகள் இந்தியா முழுவதும் விற்பனைக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. ஒட்டுக் கட்டுவதற்குத் தேவையான 'ஒபேஸம்', 'ஸோமலென்ஸி' போன்ற அடினியம் செடிகளை மட்டும் வெளிநாடுகளுக்கு ஆர்டர்களின் பேரில் அனுப்பி வைக்கிறோம். அடினியம் பூச்செடிகளின் விதைகளையும் வெளிநாடுகளுக்கு மட்டுமே ஏற்றுமதி செய்து வருகிறோம்!'' என்றார்.

'அடினியம் இண்டர்நேஷனல் சொஸைட்டி' என்கிற பெயரில் உலக அளவில் இயங்கி வரும் அமைப்பில் பன்னிரண்டு பேர் அங்கத்தினர்கள். அதில் இருவர் மட்டுமே இந்தியர்கள். ஒருவர் மும்பைக்காரர்; இன்னொருவர் நச்சலூர் கிராமத்து என்.ஆர்.சுந்தரம்.

''தைவான், சீனா மற்றும் கிழக்கிந்திய நாடுகளில் வசித்து வருபவர்கள், தங்களின் வாரிசுகளுக்கு அடினியம் பூச்செடிகளை ஒரு சொத்தாக விட்டுச் செல்கின்றனர். இதன் வளர்ப்பில் அதிக கவனம் செலுத்தத் தேவையில்லை. நம் தேசத்தின் அதிக வெப்பம் இதற்கு மிகவும் உகந்தது!'' எனச் சொல்கிறார் பத்மினி சுந்தரம். இவர்களின் இ-மெயில் முகவரி nrsplants@gmail.com

''உலகில் இயற்கையாகவே வளர்ந்து வரும் பூச்செடிகள் மற்றும் மனித முயற்சிகளினால் மகரந்தச் சேர்க்கை மூலமாக உருவாக்கப்பட்டு வளர்ந்து வரும் பூச்செடிகள் அனைத்துமே, மனிதனைப் போலவே குறைந்த ஆயுட் காலம் கொண்டவைதான். ஆனால், ஒவ்வொரு அடினியம் பூச்செடியும் ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்பாற்பட்டும் நீண்ட ஆயுளுடன் நீடித்து, பூத்துக் குலுங்கக் கூடியது என அடினியம் ஆராய்ச்சியாளர்கள் உறுதிபடக் கூறுகின்றனர்!'' என்கிறார் என்.ஆர்.சுந்தரம்.

செய்திச் சித்திரம் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

“எங்க ஊரு டெண்ட் கொட்டாய்ல தொடர்ந்து மூணு வேலை அன்ன ஆகாரம் இல்லாமப் படம் பார்த்திருக்கேன். நாம எப்ப சினிமால சேருவோம்னு கனா கண்டிருக்கேன். அதெல்லாம் இன்னைக்கு நிஜமாயிட்டிருக்கும்போது நெஞ்சுக்குள்ள பூக்கற சந்தோஷத்துக்கு அளவே இல்லீங்க'' என்று சந்தோஷம் கொப்பளிக்கப் பேசுகிறார் கதிரை ரவி. ப்ரொடக்‌ஷன் மேனேஜராகப் பணிபுரியும் இவருக்குப் பூஞ்சையான உடம்பு. ஆனால், பேச ஆரம்பித்தால் அதிகாரம் ஆட்சியைப் பிடிக்கிறது.

''ப்ரொடக்‌ஷன் மேனேஜர் ஒரு படத்தோட இதயம் மாதிரிங்க. அவங்க சரியா செயல்படலைன்னா நிர்வாகமே ஸ்தம்பிச்சுடும். தயாரிப்பாளர் படம் தயாரிக்க முன்வந்ததும் மொதல்ல கூப்பிட்டுப் பேசறது டைரக்டரா இருந்தா, அடுத்து பேசறது எக்ஸிக்யூடிவ் மேனேஜர்கிட்டதான். யார் யார் ஆர்ட்டிஸ்ட், லொகேஷன் எது, எத்தனை நாள் கால்ஷீட், பட்ஜெட் எவ்வோன்னு அத்தனை விஷயத்தையும் பேசி ஒரு முடிவுக்கு வருவாங்க. இந்த எக்ஸிக்யூடிவ் மேனேஜர் தனக்குக் கீழ இருக்குற ப்ரொடக்‌ஷன் மேனேஜருங்ககிட்ட பொறுப்பை ஒப்படைச்சிடுவாரு. அவங்க அழகா படத்தை முடிச்சு, எவ்வளவுக்கு எவ்வளவு செலவைக் குறைக்க முடியுமோ அவ்ளோ குறைச்சு தயாரிப்பாளருக்கு விசுவாசமா நடந்துக்குவாங்க.

ஏகப்பட்ட வேலைங்க ஒரு ப்ரொடக்‌ஷன் மேனேஜர் தலைமைலதான் நடக்கும். டைரக்டரோட டீம் டிஸ்கஷன் பண்றதுக்கு ஹோட்டல்ல ரூம் புக் பண்றதுல தொடங்கி, படம் முடிஞ்சு உடைக்கப் பூசணிக்காய் வாங்கறது வரைக்கும் எல்லாமே நாங்கதான். இப்படிப் பெருமையா சொல்லிக்கிட்டாலும் செய்யறது ரொம்பக் கஷ்டம். ஒரு நாளைக்கு முப்பத்தாறு மணி நேரம் இருந்தாகூடப் பத்தாது. வீட்டுக்குப் போக முடியாது. சதா ஷூட்டிங் டென்ஷன்தான்.

# எல்லாமே நாங்கதான்!

லைட் வரலியா, சாப்பாட்டுக்குத் தண்ணி இல்லையா, கார் டிரைவர் லீவ் போட்டுட்டாரா, துணை நடிகைங்க கம்மியா இருக்காங்களா... இப்படி எல்லாத்துக்கும் எங்க தலைதான் உருளும். அந்த நேரத்துக்கு ஏத்தா மாதிரி உடனே பிரச்னையைச் சரி பண்ணி சுமுகமா எல்லாம் நடந்தா நீங்கதான் ஹீரோ'ன்னு உங்களைக் கொண்டாடுவாங்க. சொதப்பிட்டா, அது சாதாரண வழுக்கலா இருக்காது. உங்க கேரியர்ல கறையா மாறிடும். அதுவே அடுத்தடுத்த வாய்ப்புகளுக்குத் தடைக்கல்லா அமைஞ்சிரும். ப்ரொடியூசர்கிட்ட கெட்ட பேரு. இதெல்லாம் எதுக்குச் சொல்றேன்னா, ஒரு ப்ரொடக்‌ஷன் மேனேஜர் எப்பவும் விழிப்போட இருக்கணும். இருந்தாத்தான் மதிப்பு. எல்லா நேரமும் தயாரிப்பாளர் ஸ்பாட்ல இருக்க மாட்டார். அந்த நேரத்துல அவரு இடத்துல வெச்சு எங்களைத்தான் பார்ப்பாங்க. அப்ப நாங்க எவ்ளோ பெர்ஃபெக்டா நடந்துக்கணும் பாருங்க!

எங்களுக்கும் யூனியன் இருக்கு. மெம்பரா இருந்தாத்தான் படங்கள்ல வொர்க் பண்ண முடியும். கார்டு எடுக்க ஐம்பதாயிரம் ரூபா கட்டணம். மலைப்பா இருந்தாலும் வேலை கிடைச்சா ஒரே படத்துல நல்ல பணம் பார்த்துடலாம். தயாரிப்பாளர்தான் எங்க தெய்வம். அவரு மனசு வச்சா நாங்க எங்கயோ போயிடலாம். பல கோடி ரூபா ப்ராஜெக்ட்டை நம்பி நம்மகிட்ட ஒப்படைக்க எவ்ளோ பெரிய மனசு வேணும்! அதே மாதிரி எக்ஸிக்யூடிவ் மேனேஜர். இவருடைய தயவுலதான் எங்க வாழ்க்கை வண்டி ஓடுது. இந்த வேலைல தில்லுமுல்லு பண்ண ஏராளமான வாய்ப்பு இருக்கு. கமிஷன்ற பேர்ல பணத்தைச் சேர்த்துத் தயாரிப்பாளராவே ஆனவங்கள்லாம் இங்க இருக்காங்க. ஆனா, அதெல்லாம் ரொம்ப நாளைக்கு நீடிக்காதுங்க. எத்தனையோ கஷ்டத்துக்கு மத்தியில் ஒரு படத்தை எடுக்குறாரு தயாரிப்பாளர். அவரு பணத்தை மோசம் பண்ணா யாரும் நல்லாவே இருக்க மாட்டாங்க.

அதே மாதிரி ஒரு சினிமா கம்பெனில ப்ரொடக்‌ஷன் மேனேஜருக்குத் தெரியாத விஷயமே இருக்க முடியாது. அங்க வர்ற ஒவ்வொரு மனுஷனோட உள்ளும் புறமும் அவருக்கு அத்துப்படி. நல்லவனா வந்து கெட்டவனாகிப் போறவனையும் பார்த்திருக்கோம்; கெட்டவனா வந்து நல்லவனாகிப் போறவனையும் பார்த்துட்டிருக்கோம்.

ப்ரொடக்‌ஷன் மேனேஜர்னா காலரைத் தூக்கி விட்டுக்கற மாதிரிதான் இருக்கும். ஆனா, எங்களுக்கும் வாய்ப்புக் கிடைக்கிறது அவ்ளோ ஒண்ணும் சாதாரண விஷயமில்ல. ஒரு

கிளைச்சாலை 11

## அன்புள்ள வாசகர்களுக்கு...

ஜகஜ்ஜால ஜோடி- 'சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்' தொடரை விஞ்ஞான ரீதியாக எழுதி வரும் டாக்டர் பி.ரவிச்சந்திரன், முறையற்ற சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை தொடர்பான ஒரு வழக்கில் கைதாகியிருப்பதால், அத்தொடர் அடுத்த வாரம் முதல் நிறுத்தி வைக்கப்படுகிறது. வழக்கு விசாரணைகள் முடிந்த பிறகு தொடரை மீண்டும் வெளியிடுவது குறித்து முடிவெடுக்கப்படும். இவ்விதழில் இத்தொடரின் அத்தியாயம் 12, செய்தி வெளியாகும் முன்னரே அச்சாகி விட்டது.



- ஆசிரியர்

படத்தோட வெற்றி, தோல்வி எங்களை பாதிக்கறதில்ல. ஆனா, நல்ல பேரு ரொம்ப முக்கியம். நேரத்துக்குப் பண்றது, செலவைக் குறைக்கறது, கேட்ட எல்லாத்தையும் இல்லைன்னு சொல்லாமத் தர்றது, சண்டை சச்சரவில்லாம யூனிட்டை வழி நடத்துறது, ப்ரொடியூசர் மனம் கோணாம நடந்துக்கறதுன்னு பல விஷயங்கள் எங்களோட முன்னேற்றத்தை நிர்ணயிக்குது. இந்தப் பட ஆட்கள் போய் எங்களைப் பத்தி நாலு நல்ல விஷயத்தை அடுத்தவங்ககிட்ட சொல்ல, அவங்க இன்னொருத்தவங்ககிட்ட சொல்ல... இப்படித்தான் நல்ல பேரு உண்டாகி வாய்ப்பு வருது. நம்பிக்கைதான் இந்த வேலைல ரொம்ப முக்கியம். கொடுத்த வேலைய நல்லா செய்வான்னு தயாரிப்பாளருக்கு நம்பிக்கை வரணும்; 'தரப்பட்ட பணியைத் தரம் குன்றாம பண்ணணும்'னு நமக்கு நம்பிக்கை இருக்கணும். இது இருந்துட்டா போதும்... இங்க யார் வேணும்னாலும் ஜெயிச்சிடலாம்.

போட்டி, பொறாமை எல்லா துறைலயும் உள்ள மாதிரி எங்க வேலைலயும் உண்டு. 'எப்படா இவனைச் சாய்க்கலாம்'னு 'ஒரு கூட்டம் எப்பவும் காத்துக்கிட்டேதான் இருக்கும். அதையும் மீறி வேலை நடக்கணும். எத்தனையோ பெரிய ஹீரோக்களால ஷூட்டிங் கேன்சல் ஆகியிருக்கு. அப்பல்லாம் நாங்கதான் பொறுப்பு ஏத்துக்கணும். எங்க, என்ன தவறு நிகழ்ந்தாலும் எல்லாம் எங்க தலைலதான் விடியும். 'இல்ல, என்னை எப்படிச் சொல்லலாம்'னு நீங்க கேட்க முடியாது; விலகி ஓட முடியாது. ஓடினா அப்படியே சினிமா ஃபீல்டை விட்டே ஓடிட வேண்டியதுதான். ப்ரொடக்ஷன் மேனேஜர் ஸ்பாட்டுக்கு வந்தா ஒரு மரியாதை இருக்கும். அதை கடைசி வரைக்கும் தக்க வச்சுக்கிட்டா போதும். அடுத்த தயாரிப்பாளர் நீங்கதான்!''

> "எங்க, என்ன தவறு நிகழ்ந்தாலும் எல்லாம் எங்க தலைலதான் விடியும்!"



சந்திப்பு : மு.மாறன்
படங்கள் : பொள்ளாச்சி சுந்தரம்

# கல்கி

தீபாவளி மலர் 2007

## அனைத்துப் பக்கங்களும் வண்ணத்தில் மிளிரும் அழகுப் பெட்டகம்!

- ☑ பக்தி
- ☑ கலை
- ☑ இலக்கியம்
- ☑ நகைச்சுவை
- ☑ நாட்டு நடப்பு
- ☑ பயணம்
- ☑ ஆன்மிகம்
- ☑ பண்பாடு
- ☑ சினிமா

நல்ல விஷயங்கள் நிறைந்த அமுதக் களஞ்சியம்!

உடனே உள்ளூர் ஏஜென்டிடம் பதிவு செய்யுங்கள். விலை ரூ.100. கூரியரில் பெற ரூ.30 சேர்த்து டி.டி. அல்லது எம்.ஓ அனுப்புவும்.





# ஆசிரியர் பக்கம்

## நியாயமா நியாயமா நியாயமா?



'நியாயமா டாக்டர்ஸ்...?' என்ற கடந்த வார அட்டைப் படத் தலைப்பை ஆட்சேபித்து சில மருத்துவர்கள் நமக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள்- ஒரு சில மருத்துவர்கள் செய்யும் தவறை ஒட்டுமொத்த மருத்துவத் துறை மீதும் ஏற்றிப் பேசலாமா என்று! யார் எவ்வளவு ஆட்சேபித்தாலும், 'நியாயமா?' என்ற கேள்வி எழுப்பப்படத்தான் வேண்டும். மீடியாவை நோக்கி மருதன் காரசாரமாக எழுப்பிய இதே கேள்வி, 7.10.07 கல்கி இதழில் இடம் பெற்றிருக்கிறது. எந்தத் துறையும் விமர்சனத்துக்கு அப்பாற்பட்டதல்ல. இன்னும் சொல்லப் போனால் அனைத்துத் துறைகளிலும் ஆத்ம பரிசோதனை என்பது இடையறாது நிகழ்த்தப்பட வேண்டும். அந்த முயற்சி இல்லாததால்தான் விஞ்ஞான முன்னேற்றம், தொழில் முன்னேற்றம், பொருளாதார முன்னேற்றம் என சகலமும் இருந்தாலும், பேராசை எனும் பிணி மனிதனைப் பிடித்து ஆட்டுகிறது!

கொடுத்த வாக்கை மீறி, ஓர் அரசியல் கட்சி ஆட்சி அதிகாரத்தைப் பகிர்ந்துகொள்ள பகிரங்கமாக மறுக்கிறது...

ஒரு வழக்குரைஞர் காவல்துறையால் தாக்கப்பட்டதற்காக, சென்னை வழக்குரைஞர்கள் அத்தனை பேரும் பொதுமக்கள் நலனைப் புறக்கணித்து வேலை நிறுத்தம் செய்கிறார்கள்...

நடுத்தர வர்க்கத்தினர் வசிக்கும் புறநகர்ப் பகுதியில் இயங்கி, குறைந்த கட்டணத்தில் சீரான கல்வி வழங்கிவரும் ஒரு பள்ளியை, இரவோடு இரவாக வேறு ஒரு பகட்டுப் பள்ளி நிர்வாகம் விலைக்கு வாங்குகிறது. பள்ளிக் கட்டணத்தைக் கட்டுப்படியாகாத உயரத்துக்கு ஏற்றி, பிள்ளைகளைக் கொடுமைப்படுத்தி பெற்றோர்களைக் கடனாளியாக்குகிறது...

லட்சக்கணக்கில் நன்கொடை பெற்றுக் கொண்டு வருடாந்தர விருதுகளை விற்கும் மையங்களாக சில சபாக்கள் செயல்படுகின்றன...!

இவையெல்லாம் சம்பந்தப்பட்ட துறைகளின் சீரழிவுக்கு அடையாளம் என்பதை மறுக்க முடியாது.

இத்தகைய விஷயங்களுக்குத் துணை போகாமல் இருப்பதுடன் எதிர்த்துக் குரல் கொடுப்பது அவசியம்.

வெளியிலிருப்போர் எதிர்ப்பதால் விஷயம் அம்பலமாகும்; ஆனால், உள்ளிருந்து வரும் எதிர்ப்பு மட்டுமே சீர்திருத்தத்துக்கு வழி வகுக்கும்.

'கடமையைச் செய்; பலனை எதிர்பார்க்காதே' என்று கீதை காட்டுவது மிக உயர்ந்த இலக்கு. ஆனால், அத்தனை தூரம் எம்பினால்தான் நாம் பேராசையாவது படாமல் இருக்க முடியும்.

நாமோ, கீதையை விட்டுவிட்டு கண்ணன் வாழ்ந்தானா என்கிற ஆராய்ச்சியில் வாழ்நாளைக் கரைத்து, அகந்தையையும் ஆடம்பரத்தையும் வளர்த்துக்கொண்டிருக்கிறோம்!

# விட்டுக் கொடுப்போம்!

நம் ஊருக்கு வரும் சுற்றுலா பயணிகள்
தங்களுக்குப் பிடித்த இடங்களை
சுற்றிப் பார்க்கும் சமயங்களில்
அவர்களுக்கு முன்னுரிமை கொடுத்து,
நாம் விட்டுக் கொடுத்து உதவுவது மிகவும் முக்கியம்.

சொந்த ஊர்களுக்குத் திரும்பிய பிறகு
அந்த சுகமான நினைவுகளால்
மீண்டும் மீண்டும் தமிழகத்திற்கு வரத் தூண்டும்
சுற்றுலாப் பயணிகளைப்
போற்றுதல் அனைவரது கடமை.

விருந்தினர் போற்றுதும்
விருந்தினர் போற்றுதும்




**தமிழ்நாடு சுற்றுலாத்துறை**

தமிழ் நாடு சுற்றுலா வளாகம், வாலாஜா ரோடு, சென்னை-600 002.
முன் பதிவு தொடர்புக்கு : 25383333, 25388785, 25361640 **ஃபேக்ஸ் :** 25361385, 25366633

